குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 29 ] சாதாரண ஆண்டு ஆனித்திங்கள் 10—7—70 [ இதழ் 8

தருமையாதீனம் குருபூஜை விழாவில்





ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
கொலுக் காட்சி வழங்குதல்

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

என்னதன்று நின்செயலே
என்றறிந்தால் யான்விரும்பி
என்னவென்று வாய்திறப்பேன்
ஈசனே—இன்னமின்னம்
எப்படியோ நாயேனை
ஈடேற்ற வேண்டுமுனக்(கு)
அப்படியே செய்தருளு
வாய். (89)

---

ஆசிரியர் :
வித்துவான்
சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்

துணையாசிரியர் :
மகாவித்துவான்
ஸ்ரீ அருணைவடிவேல் முதலியார்

---

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 29 | 10-7-70 | இதழ் 8

## உட்பொருள்






குருபாதம்

# ஞானசம்பந்தம்

| மலர் 29 | சாதாரண – ஆனி – 10 – 7 – 70 | இதழ் 8 |
|---|---|---|



திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே, – சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## விரலுற்ற பாதம்

யாதொரு பொருளும் பெருமை பெறுவது அதன் ஆற்றலாற்றான். வண்டியில் ஏற்றிய பாரத்தை இழுக்கும் எருது, மிக்க பாரத்தை இழுத்து விரைவிற் செல்லுமாயின், பெருமை பெறுகின்றது. இன்னும் அது, சேற்றுநிலம், மேட்டு நிலம் முதலியன குறுக்கிட்டபொழுதும் அவைகளைப் பொருட்படுத்தாமல் இழுத்துச் செல்லக்கூடியதாயின், மிக்க பெருமையைப் பெறுகின்றது. ''மடுத்தவாய் எல்லாம் பகட்டன்னான் உற்ற- இடுக்கண் இடுக்கட் படும்" என்று திருவள்ளுவரும் இதனைப் பெருமையாகக் குறிக்கின்றார்.

போரில் பகைவரை வெல்லுகின்ற வீரன் ஒருநொடியில் பலபேரை வெல்ல வல்லனாயின் அவன் அடையும் பெருமைக்கு

அளவில்லை. "ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை - நாகம் உயிர்ப்பக் கெடும்" என்று அத்தகைய வீரனைத் திருவள்ளுவர் பாராட்டுகின்றார். இராமபிரான், 'ஓர் அம்பினால் ஏழு மராமரங்களைத் துளைத்த வில்லாற்றல் படைத்தவன்' என்றும், 'அவனது அம்பு, எதிர்நின்ற பகைவர் மார்பில்பட்டு உருவுதலோடு ஒழியாது, வானத்திலும், கடலிலும் சென்று வென்று மீள அம்பருத்தூணியில் வந்து புகும்' என்றும் இராமாயணத்தில் பெருமையாகப் பேசப்படுவதை நாம் நன்கறிவோம். சங்கஇலக்கியங்களில் 'வல்வில் ஓரி' என்ற ஒருவள்ளல் இத்தகைய வில்லாற்றல் உடையவனாகப் பேசப் படுகின்றான். பாரதத்தில் அருச்சுனன் வில்லினால் இவ்வாறு பாராட்டப்படுபவன். வீமன் மல்லினால் பாராட்டப்படுபவன். "மிடுக்கிலாதானை வீமனே விறல் விசயனே வில்லுக்கு" எனச் சுந்தரரும் அருளிச்செய்தார்.

கவி இயற்றும் புலவர்கள் இனிய நல்ல கவிகளை விரைவில் பாட வல்லராயின் பெருமை பெறுகின்றார்கள். "கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும்" என்று கம்பரது கவித் திறம் புகழப்படுகின்றது. "மூச்சு விடுமுன்னே முந்நூறும் நானூறும் - ஆச்சுதென்றால் ஆயிரம்பாட் டாகாதோ" என்று ஒருபுலவரும். "இம்மென்னும் முன்னே எழுநூறும் முந்நூறும் - அம்மென்றால் ஆயிரம் பாட்டாகாதோ" என்று மற்றொரு புலவரும் தங்கள் கவித்திறத்தைப் புகழ்ந்துகொண்டதாக வரலாறு சொல்லப்படுகின்றது.

நாட்டை ஆள்கின்ற அரசன் ஞாலம் பொதுக்கடிந்து உலகை ஒருகுடைக்கீழ் வைத்து ஆள வல்லனாயின் 'பேரரசன்' என்று பெருமையாகப் புகழப்படுகின்றான். இவையெல்லாம் மக்களுடைய ஆற்றல்கள்.

இனி உலகிற்கு முதலாயுள்ள பூதங்களின் ஆற்றல்கள் எத்துணைப் பெருமையுடையன என்பதை நாம் அறிவோம். நிலம் எவ்வளவு பொருள்களைத் தாங்கிநிற்கின்றது! நீரும், காற்றும் பெருமழை வெள்ளமாயும், பெருங்காற்றுப் புயலாயும் தோன்றும்பொழுது உலகத்தையே அழிக்கும் ஆற்றல்பெற்று விளங்குகின்றன. வானத்தில் உள்ள சூரியனது வெம்மைக் கதிர் எப்பொருளையும் சுட்டெரிக்கும் திறன் படைத்தது.

சந்திரன் முதலிய ஏனைக் கோள்களாலே உலகம் பல மாற்றங் களுக்கு உள்ளாகின்றது என்பர். இவ்வாற்றால் இவைகளையே மக்கள் தெய்வமாகக் கருதி வழிபடும் நிலையும் உண்டாயிற்று. எனவே, எப்பொருள் ஆற்றலில் எத்துணை மிகுந்துள்ளதோ, அப்பொருள், அதனால் அத்துணைப் பெருமை உறுகின்றது என்பது தெளிவு.

இப்படிப் பார்க்கும்பொழுது எல்லாப் பொருள்களின் ஆற்றல்களையும் தன்னுள் அடக்கி அவைகளைத் தன் விருப்பப் படி இயக்கும் ஆற்றல் பெற்ற ஒருபொருள் இருக்குமாயின், அதன் பெருமைக்கு அளவுண்டோ! அதுவன்றோ எல்லா ராலும், எக்காலத்தும் வழிபடத் தக்க பொருள்! அப்பொருள் யாது? அதுதான் கடவுட் பொருள்.

மேற்கூறிய பலவகைப் பொருள்களும் ஒவ்வொருவகை யில் அமைந்த ஒவ்வோர் ஆற்றலையேஉடையன. அவற்றுள் ஒன்றற்கு உள்ள ஆற்றல் மற்றொன்றற்கு இல்லை. உள்ள ஆற்றலும்ஒரு வரம்பிற்கு உட்பட்டனவே, அவை அத்தன் மையவாக, எவ்வகையிலும் அமைந்த எல்லா ஆற்றல்களையும் உடையதும், அவ்வாற்றல்களையும் வரம்பிலவாகப்பெற்று நிற் பதும்எதுவோ அதுவே கடவுட்பொருள். எனவே, அதுவே எல்லாவற்றினும் பெரிய பொருள். 'கடவுள்' என்பதற்கு, 'எல்லாவற்றையும் கடந்து நிற்பது' என்பதே பொருளாத லால், 'எல்லாவற்றினும் பெரிது' என்பதே அதன் கருத்து. 'பரம், பிரமம்' என்னும் வடசொற்களுக்கும் இதுவே பொருள்.

'கடவுட் பொருள் அளவிடற்கரிய பேராற்றல் வாய்ந்தது என்பதை விளக்கவே புராணங்கள் பற்பல வரலாறுகளைக் கூறுகின்றன.

பொருள்களின் ஆற்றல் வெளிப்படும்பொழுது இருவகை யாக வெளிப்படுகின்றன. ஒன்று இனிமை; மற்றொன்று கடுமை. இவற்றுள் இனிமையாக வெளிப்படும்பொழுது அதன் பெருமையை மக்கள் நன்கு உணர்தல் இல்லை; கடுமை யாக வெளிப்படும்பொழுதுதான் நன்கு உணர்கின்றார்கள். எடுத்துக்காட்டாக, நெருப்பின் ஆற்றல் இருவகையாகப் புலப்படுகின்றது. ஒன்று இருளைப் போக்கிப் பொருளை விளக்குவது. மற்றொன்று அடுத்த பொருளைச் சுடுவது.

இவற்றுள் விளக்குவதாக வெளிப்படுவதில் நெருப்பின் ஆற்றலை மக்கள் நன்கு உணர்வதில்லை. சுடுவதாக வெளிப்படுவதில்தான் நன்கு உணர்கின்றார்கள். நீர் உணவுப்பொருளை உண்டாக்கித் தானும் உணவாகப்பயன்படுகின்றது. ஆயினும், வெள்ளப் பெருக்கில்தான் அதன் ஆற்றலை மக்கள் உணர்கின்றார்கள். காற்றிலும் இப்படித்தான். எனவே, கடவுளது ஆற்றலின் பெருமையையும் மக்கள் இனிமையாக வெளிப்படும்பொழுது அறிவதில்லை. கடுமையாக வெளிப்படும் பொழுதுதான் அறிகின்றனர்.

உயிர்கட்குப் பலவகை நலங்களையும் தருவது கடவுளின் திருவருளே. ஆயினும், அந்நிலையில் அதன் ஆற்றலின் திறத்தை மக்கள் அறிவதில்லை. எவையேனும் சில ஒறுப்புக்களைச் செய்யும்பொழுதுதான் உணர்கின்றார்கள். இனிமையைத் தருவது, 'அளி' என்றும், கடுமையைத் தருவது 'தெறல்' என்றும் சொல்லப்படும். கடவுளின் ஆற்றலை மக்கள் அளியிடத்து உணராது, தெறலிடத்தே உணர்கின்றார்கள். அதனாற்றான் புராணங்கள் கடவுளது தெறலையேசிறப்புற எடுத்துக் கூறுகின்றன. சிவபிரான் திரிபுரம் எரித்த வரலாறு, காலனை உதைத்த வரலாறு, யானையை உரித்த வரலாறு முதலியன அத்தகையனவே. அது பற்றித்தான் சமயாசாரியர்கள் அவற்றைத் தம் அருட்பாடல்களில் அடிக்கடி எடுத்து நினைவூட்டிச் செல்கின்றார்கள். அவற்றுள் இராவணன் கயிலைமலையைப் பெயர்த்து நெருக்குண்ட வரலாறு ஒன்று. இதனை ஞானசம்பந்தர் தமது திருப்பதிகங்களில் எட்டாவது திருப்பாட்டிலும், நாவுக்கரசர் தமது திருப்பதிகங்களின் இறுதிப் பாட்டிலும் பெரும்பான்மையும் தவறாது அருளிச்செய்வர்.

இராவணன் பிரமதேவனை நோக்கிச் செய்த தவத்தால் பெருவலி படைத்தவனாய் எட்டுத் திக்குகளிலும் சென்று தேவர்களை வென்று, வடதிசையில் குபேரனை அடக்கிஅவனது புட்பக விமானத்தைக் கவர்ந்துகொண்டு அதன்மேல் ஏறி வான்வழியாக வடகிழக்கில் வரும்பொழுது சிவபிரான் வீற்றிருக்கும் கயிலைமலையை அவ்விமானம் கீழ்ப்படுத்திச் செல்லமாட்டாது தடைப்பட்டு நின்றது. அதுகண்ட இராவணன் சினம் மிக்கவனாய் அம்மலையைப் பெயர்த்தெறிய எண்ணினான். அதனை அறிந்த விமானமோட்டி, அவனை வணங்கிநின்று,

ஐயா, 'இது சிவபிரான் வீற்றிருக்கின்ற திருமலே; இவ் விமானம் கடுவேகம் உடையதாயினும், இதனைக் கீழ்ப்படுத்தி மேற்செல்லமாட்டாது. ஆகவே, உனது வீரத்தை இங்குக் காட்டவேண்டா; காட்டின், கேடே விளையும்; அதனால் அப்பால் வேறொரு திசையாக விலகிப் போவதே நல்லது' என்று அறிவுரை கூறினான். இராவணன், 'எனது ஆற்றலை உணராமல் என்னை இகழ்கின்றாய்' என்று அவனை மிகவும் கடிந்து பேசி, விமானத்தினின்றும் இறங்கி விரைவாகச் சென்று கயிலை மலையைத் தனது தோளாற்றலால் இருபது கைகளையும் கொண்டு பெயர்த்துத் தலையில் வைக்கத் தொடங்கினான். கயிலாயம் பெயர்ந்து 'கிடுகிடு' என்று அசைவதாயிற்று. அதன்மேல் இருந்த உமாதேவி அஞ்சியோடிச் சிவபிரானைத் தழுவிக்கொண்டாள். சிவபிரான் புன்முறுவல் பூத்து, தனது வலக்கால் பெருவிரலைச் சிறிதே ஊன்ற, இராவணன் அம்மலைக்கீழ் அகப்பட்டு நெருக்குண்டு வெளியே வரமாட்டாமல் எட்டுத் திசைகளும் செவிடு படும்படி 'ஓ' என்று பல்லாண்டுகள் கதறித் துடித்தான். முன்பு 'தசக்கிரீவன், என்று புகழப்பட்ட அவன், அப்பொழுது; இராவணன்—கதறி அழுதவன்' என்று இகழப்பட்டான். அப்பொழுது அவ்வழியாக வந்த நாரதமுனிவர், 'சிவபிரானுக்குச் சாம கானத்தைக் கேட்பதில் மிக்க விருப்பம் உண்டு. அதனை வீணை இசையோடு பாடின், அப்பெருமான் திருவுளம் இரங்கும்' என்று சொல்லிச் செல்ல இராவணன் தனது பத்துத் தலைகளுள் ஒன்றைத்திருகிமற்றைய உறுப்புக்களையும் கொண்டு வீணை ஒன்றை அமைத்துச் சாம கானம் பாடினான். அதனால் மகிழ்ச்சியுற்ற பெருமான் அவனை வெளிவரச்செய்து, முக்கோடி வாழ்நாளும், யாவரையும் வெல்லும் வாள் ஒன்றும் வழங்கி விடுத்தான்' என்பது அவ்வரலாறு.

பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் யாவரையும் வெல்லும் ஆற்றலையும் பெரியதொரு மலையைப் பெயர்க்கும் தோள் வலிமையையும் உடைய ஓர் அரக்கனைக் கால்விரல் ஒன்றினாலே தெறும் ஆற்றல் படைத்தவன் சிவபெருமான் என்று அப்பெருமானைப் பண்டையோர் போற்றினர் என்றால், அவர்கள் வணங்கிய முதற்கடவுள் யாவன் என்பது இனிது விளங்குகின்றதன்றோ! அதனால்தான் நாவுக்கரசர் தமது தசபுராணத் திருப்பதிகத்துள் அவ்வரலாற்றை எடுத்துக்கூறி,

அப்பெருமானது, அனைத்தையும் செய்யும் விரல் உற்ற (விறல் உற்ற) பாதமே தியானிக்கப்படும் பொருளாகும்' என்பதை உணர்த்தியருளினர். அத்திருப்பாடல் வருமாறு:

'கடுகிய தேர்செலாது கயிலாய மீது;
கருதேல் உன் வீரம்; ஒழிநீ;
முடுகுவ தன்று தன்மம்' எனநின்று பாகன்
மொழிவானை நன்று முனியா,
வெடுவெடு என்று சென்று விரைவுற் றரக்கன்
முடியுற் றெடுக்க முடிதோள்
நெடுநெடு இற்று வீழ விரல் உற்ற பாதம்
நினைவுற்ற தென்றன் மனனே'

இராமபிரானும் சிவபிரானை வழிபட்டே இராவணனை அழித்துச் சீதையை மீட்கும் வரம் பெற்றமை வான்மீகி இராமாயணத்தில் கூறப்பட்டது. அதனுல் பிரமன் கொடுத்த வரம், மாயோனது ஆற்றல் எல்லாவற்றையும் சிவபிரானது திருவடி விரல் கடந்து நின்றமை குறிக்கப்பட்டதாம். அது பற்றியே, 'அப்பாதம் ஒன்றையே என் உள்ளம் உள்குவதாயிற்று' என்கின்ருர் அப்பர்.

'இவ்வரலாற்றை ஞானசம்பந்தரும், நாவுக்கரசரும் பதிகந்தோறும் எடுத்துக் கூறுதற்கு மற்ருெரு கருத்தும் உண்டு' என்பதைச் சேக்கிழார் ஞானசம்பந்தர் புராணத்தில் குறித்துள்ளார். அஃதாவது, 'அறியாமையால் முன்பு தவறு செய்தோர் பின்பு அத் தவற்றை உணர்ந்து வந்து பணிவார்களாயின்' இறைவன் அதனைப் பொறுத்து அருள்புரிவான்' என்பது. திருநாவுக்கரசர் இவ்வுண்மை தமக்கு மிகவும் பொருந்துவதாகக் கருதினுர் என்று சேக்கிழார் குறித்தருளுகின்ருர். எனவே, 'வைதிக சமயங்களிலும் சமணபௌத்த சமயங்களிற் போலப் பாவத்திற்குக் கடவுள் மன்னிப்பு இல்லை' என்பாரது கூற்று நன்கு ஆராயாது கூறுவதாய் முடிகின்றது. இவற்றையெல்லாம் நன்குணர்ந்து நாவுக்கரசர் நினைவுற்ற விரல் உற்ற பாதத்தை நினையின் நாமும் உய்தி பெறுதல் கூடுவதாம்.

——*——

உ

குருபாதம்

குருவருள்

# தோத்திரமும் சாத்திரமும்

## தன்னை அடைந்தார் வினைதீர்க்கும் தலைவன்

உலகம் போற்றுவது உயர்ந்தோரையே. உயர்ந்தோரை, 'தலையாயவர்' என்பர். 'தலையாயவர்' என்பதே வடமொழியில் 'உத்தமர்' எனப்படுகின்றது. தலையாயவர்க்குச் சில செயல்கள் கடமையாக அமைந்துவிடுகின்றன. அவை, தம்மிடம் வந்து இரந்தவர்க்கு 'இல்லை' என்னாது ஈயும் ஈகை, தம்மை இகழ்ந்தவரைப் பொறுத்துக்கொள்ளும் பொறை, அடைக்கலம் என்று அடைந்தவரைக் காக்கும் அருள் முதலியன.

இவைகளுள் ஒவ்வொருவரிடம் ஒவ்வொரு பண்பு சிறந்து விளங்குவது இயல்பு. கன்னன், குமணன்போன்றவர்கள்பால் இரந்தவர்க்கு இல்லையென்னாது உயிரையும் ஈயும் ஈகை சிறந்து விளங்கியது. தருமபுத்திரன், சோழன் நலங்கிள்ளியின் இளவல் மாவளத்தான்போன்றவர்கள் பால் பொறுமை மிக்கு விளங்கிற்று. அடைக்கலம் என்று வந்த புருவுக்காகத் தன் உடம்பையே அரிந்து கொடுத்துப் பின் தானே துலைத் தட்டிலும் ஏறிய சிபிச் சக்கரவர்த்தி போன்றவரிடம் அடுத்தவரைக் காக்கும் அருள் பெரிதும் நிறைந்து நின்றது. என்றாலும் எல்லா உயர் பண்பும் எல்லாரிடமும் மிக்கிருக்கும் என்று சொல்வதற்கில்லை. அனைத்தையும் அளவின்றிக் கொண்டிருப்பவன் இறைவனே.

இறைவனது அளவில்லாத பெருமைகளுள், 'பிழை பொறுத்தல், அடுத்தவரைக் காத்தல்' என்பவற்றை நம் சமயாசாரியர் ஆகிய அப்பர் பெருமானை அவன் ஆண்டருளிய வரலாற்றில் காண்கின்றோம். அவற்றை அவரே தமது முதல் திருப்பதிகத்துள் வலியுறுத்தி அருளிச்செய்கின்றார்.

நாவுக்கரசர் அவதரித்தருளியது சிவநெறிபோற்றும் சீரிய குடியிலே. பின்பு அவர் வளர்ந்து கற்ற கலைகளும் சிவநெறியைப் போற்றும் சிறப்பினவே. கற்ற வழியிலே அவர் இளமைக் காலத்தில் தவறின்றி ஒழுகியும் வந்தார். ஆயினும், காலச்சூழ்நிலை அவரைப் பிழையின்கண் வீழ்த்தியது. 'காலச் சூழ்நிலை' என்று நாம் சொல்கின்றோம்; உண்மைக் காரணம், இறைவனது திருவருள் அவ்வகையில் இருந்ததுதான்' என்கின்றார் சேக்கிழார்.

நாவுக்கரசர் அவதரித்து வாழ்ந்த காலத்தில் தமிழ் நாடெங்கும் சமண்சமயப் பிரசாரமே மிக்கோங்கி இருந்தது. அரசனே சமணனாய் இருந்தான். ஆட்சிச் சமயம் சமண் சமயமாகவே இருந்தது. அம் மதத்தின் குருமார்கள் உயிர் இரக்கம் (சீவ காருணியம் - கொல்லாமை) என்ற ஒன்றிலே பிற குறைபாடுகளையெல்லாம் மறையும்படி செய்து மக்களைத் தங்கள் மதத்தை மேற்கொள்ளச்செய்தனர்.

குடிப்பிறப்பு, கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலியவற்றில் சிறந்து விளங்கிய நாவுக்கரசரும் (அப்பொழுது அவருக்கு மருணீக்கியார் என்பதே பெயர்) அவர்களது சொல்லில் மயங்கினர். அறிவிலும், ஒழுக்கத்திலும் சிறந்த தம் பொருட்டாகவே தம் கணவருடன் விண்ணுலகம் செல்லாது உயிர் தரித்திருக்கின்ற தமக்கையார் திலகவதியாரது வார்த்தையையும் கேளாதவராய்ச் சைவ சமயத்தை விடுத்துச் சமண் சமயத்திற் சேர்ந்து பாடலிபுத்திரப் பள்ளியில் தங்கி, அச்சமய சாத்திரங்களை நன்கு ஓதிச் சமணக் குருமார்களாலும், சமண அரசனாலும் சிறந்த பாராட்டுக்களுடன், 'தருமசேனர்' என்ற பட்டத்தையும் பெற்றார்.

தமக்கையார் திலகவதியார், செய்வது அறியாதவராய்த் தாம் அவதரித்த திருவாமூருக்கு அருகில் உள்ள தலமாகிய திருவதிகையை அடைந்து அங்குக் கோயில் கொண்டிருக்கும் வீரட்டானத்து இறைவருக்குப் பணிபுரிந்து, 'தம் தம்பியாரை எவ்வண்ணமேனும் நல்வழிப் படுத்தியருளவேண்டும்' என்று பலகாலும் வேண்டி வந்தார்.

பன்னாள் இரந்து பணிந்த அம்மையாரது வேண்டுகோளுக்கு இறைவர் திருவுளம் இரங்கி ஒருநாள், அவர்தம்

கனவில் தோன்றி, 'உன்னுடைய மனக்கவலை ஒழி நீ; உன் உடன் பிறந்தானைச் சூலைநோய் கொடுத்து ஆட்கொள்கின்றோம்' என்று சொல்லி மறைந்தார்.

இறைவர் அருள்வழியே பாடலிபுத்திரத்தில் இருந்த தரும சேனர்க்குக் கொடிய சூலைநோய் உண்டாகி, ஒருவராலும் தீர்க்கப் படாதுபோகத் தாம் தமக்கையாரிடம் அனுப்பிய ஓர் ஏவலாளன் வழி, 'இது வீரட்டானேசுரர் செயல்; அவரை அடைந்தாலன்றித் தீராது' என்பதை உணர்ந்து இரவில் சமண சமயத்தையும், திகம்பர சமணக் கோலத்தையும், சமணப் பள்ளியையும் துறந்து, சமையற்காரனைத் துணைக்கொண்டு நடந்து, விடியலிலே திருவதிகையை அடைந்து, தமக்கையார் திருவடிகளிலே தம்மை மன்னிக்க வேண்டும் குறிப்புடன் வீழ்ந்து அழுதார்.

தமக்கையார் தம்பியாரது நிலைக்கு இரங்கி, 'நுண்ணிய நூல் பல கற்றிருந்தும் ஊழ்வலியால் அறிவிழந்து பரசமயப் படுகுழியில் விழுந்தீர்; இனி வருந்தலீர்; வீரட்டானேசுரரை வணங்கி நலம்பெற்று வாழ்வீர்' என்று வாழ்த்தித் திருவீரட்டானரை நினைந்து திருநீற்றை எடுத்துத் திருவைந்தெழுத்தை ஓதிக் கொடுத்தார். தம்பியார், 'தம் துன்பம் தொலைந்தது' என்று மகிழ்ந்து வாங்கி உடல் நிறையப் பூசிக் கொண்டு, தமக்கையார் பின்னே திருப்பள்ளி எழுச்சிக் காலத்தில் கோயிலுக்குள் சென்று வீரட்டானேசுரரைக் கண்டு வணங்கித் தாம் செய்த பிழையையும், தமக்கு உண்டாகிய சூலைநோயையும் நினைந்து வருந்தியபொழுது, அவ்விறைவரது திருவருளால் செந்தமிழ்ப் பாடல் தம் திருவாயினின்றும் தோன்ற, 'வீரட்டானத்துறை அம்மானே, அறியாமையால் பிழை செய்தேன்; ஆயினும், அதனை அறிந்து வந்து உன்னை அடைக்கலமாக அடைந்தேன் ஆதலின், அப்பிழை பொறுத்து ஆளுதல் வேண்டும்; அடுத்தவரைக் காப்பதன்றோ உயர்ந்தோர் செயல்! சூலை நோயை இனியும் பொறுக்கலாற்றேன்; அருள்புரிதல் வேண்டும்' என்னும் கருத்தமைய அரிய இசைப் பாடல்களைப் பாடியருளினர். அவையே "கூற்றாயினவாறு" என்னும் திருப்பதிகம் என்பது நன்கறிந்தது.

அதனுள் நாவுக்கரசர், 'பிழைகள் பலவற்றை நான் செய்யவில்லை. மூத்தோர் சொல்லிய வார்த்தையைக் கேளாது எனக்கு நல்லது எனத் தோன்றிய ஒரு நெறியில் சென்ற ஒரு பிழையைத்தான் செய்தேன்; அதனைப் பொறுத்தருள வேண்டும். அதுவும் அறியாமற் செய்தபிழை. அதனை, 'பிழை' என்று இப்பொழுது உணர்ந்து உம்மையடைந் தேன்; காப்பாளரது காவலை இகழ்ந்து கடுவெள்ளத்தில் பாய நினைத்த ஒருவனை அவன் கருத்துக்குத் துணையாகக் கரையில் இருந்த சிலர் அவனை அவ்வெள்ளத்தில் தள்ளிவிட, அங்ஙனம் தள்ளப்பட்டவன் அடைகின்ற நிலையை நான் இதுபொழுது அடைந்து, வருந்துகின்றேன்; என்னைக் காவா தொழிந்தாய், 'நீ அடைந்தவர்க்கு அருள் புரிபவன்' என்பதை என்போன்றவர்கள் ஒருபோதும் நம்பமாட்டார்கள். அந்நம்பிக்கையை உண்டாக்கி உலகை உய்வித்தற்பொருட் டாயினும், எனது சூலைநோயை நீக்கி என்னை ஆட்கொண் டருள வேண்டும்; நீ உனது நிலயமாகிய கயிலாயத்தையே பெயர்த்த இராவணனது பெரும் பிழையையும் பொறுத்துப் பின்பு அவனுக்கு அருள்செய்தாய் அல்லையோ' என்ற கருத்துக்களெல்லாம் தோன்றப் பாடினர்.

"முன்னம் அடியேன் அறியா மையினல்
முனிந்தென்னை நலிந்து மூடக்கியிடப்
பின்னை அடியேன் உமக்காளும் பட்டேன்;
சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்"
தன்னை அடைந்தார் வினை தீர்ப்பதன்றே
தலையாயவர் தங்கட னாவதுதான்"

"காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமையால்
கரைநின்றவர் கண்டுகொள் என்றுசொலி
நீத்தாய கயம்புக நூக்கியிட
நிலைக்கொள்ளும் வழித்துறை ஒன்றறியேன்"

"என்போலிகள் உம்மை இனித்தெளியார்
அடியார் படுவது இதுவேயாகில்"

என்ற பகுதிகள் காணத்தக்கன. அவற்றைக் கேட்டவுடன் இறைவர் அவரது சூலைநோயைத் தீர்த்து, 'நாவுக்கரசர்'

என்ற சிறப்புப்பெயரையும் வழங்கியருளினர். பின்னும் சமணர்கள் இழைத்த தீங்குகள் ஒன்றும் அவரை நலியாதவாறு காத்தமை வெளிப்படை. அதனால் நாவுக்கரசர் "கற்றுணைப் பூட்டி ஓர் கடலிற் பாய்ச்சினும் – நற்றுணையாவது நமச்சிவாயவே" "அஞ்சுவது யாதொன்றும் இல்லை அஞ்ச வருவதும் இல்லை" என்றெல்லாம் பாடியருளினர். ஆயினும், இத்தகைய நலங்கள் யாவும் அடைந்தவர்க்கல்லாது பெற இயலாது. வள்ளல்களாயினும், வந்து கேட்டவர்க்கே வழங்குவர். அருளாளராயினும் அடைந்தவரையே பாதுகாப்பர். அதுபோல இறைவரது அருளையும் அடைந்தவரே பெற இயலும். இதனையும் நாவுக்கரசர்,

> "சலமிலன் சங்கரன்; சார்ந்தவர்க் கலால்
> நலமிலன்; ( சார்ந்தவர்க்கு ) நாள்தோறும்
> நல்குவான் நலன்"

என்று அருளிச்செய்கின்றார். இன்னதொரு தன்மை 'இறைவனுக்கு நடுவுநிலைமை ஆகுமோ' என்ற ஐயத்தை நீக்கவே, "சலமிலன்" என்று அருளினர். சலம்-கோட்டம்.

'தன்னை அடைந்தார் வினையைத் தீர்க்கும் தலைவனே இறைவன்' என்னும் இத்தோத்திரப் பொருளைச் சிவஞான போதம், சிவஞான சித்தி என்னும் சாத்திரங்களில் பத்தாம் சூத்திரம் முதலியவற்றை நன்குணர்ந்தவழியே ஐயமறத் தெளிதல்கூடும். "சார்ந்தாரைக் காத்தலே தலைவர் கடன்" என்பது அங்கு ஐயமற விளக்கப்படுகின்றது. ஆதலின் தோத்திரங்களைச் சாத்திர உணர்ச்சிகொண்டு உணர்ந்து மக்கள் தெளிவு பெறுவார்களாக.



 

# சித்தாந்த வினாவிடை



தருமையாதீனத் தமிழ்ப்புலவர், சித்தாந்தக் கலைமணி,
மகாவித்துவான், முதுபெரும்புலவர்,

**திரு. சி. அருணைவடிவேலு முதலியார்.**

( மலர் 29, இதழ் 5, பக்கம் 271ன் தொடர்ச்சி )

## தச காரியங்கள் கேட்டல் முதலிய நான்கில் அடங்குதல்

மாணாக்கன் : முன்பு, 'கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் என்னும் நான்குமே ஞானத்தின் படிநிலைகள்' என்று அருளிச் செய்தீர்கள்; அவ்வாருகப் பின்பு, 'தத்துவரூபம் முதலாக ஞானத்தின் படிநிலைகள் பத்து' என அருளியது என்னையோ ?

ஆசிரியர் :- இவை இரண்டும் வேறுவேறல்ல; கேட்டல் முதலிய நான்குமே தத்துவரூபம் முதலாகச் சொல்லிய பத்தாகக் காணப்படுகின்றன என்பது அவற்றின் இயல்புகளை உற்று நோக்கின் எளிதின் விளங்குவதாம். துகளறுபோதம் முதலிய சில நூல்களில் இவை, 'முப்பது' என்று இன்னும் விரித்துச் சொல்லப்படும். தசகாரியத்துள், 'ரூபம்' என்பன மூன்றும் கேட்டலும், 'தரிசனம்' என்பன மூன்றும் சிந்தித்தலும், தத்துவ சுத்தி, ஆன்ம சுத்தி, சிவயோகம் என்னும் மூன்றும் தெளிதலும், சிவபோகம் நிட்டையுமாதல் ஓர்ந்துணர்ந்துகொள்க. 'சிவப்பிரகாசம்' என்னும் நூல் தசகாரியத்துள் 'தத்துவரூபம்' முதல் 'ஆன்மதரிசனம்' முடிய உள்ள ஐந்தனையும்' 'ஆன்ம தரிசனம்' என ஒன்ருக்கி, ஆன்ம சுத்தியை 'ஆன்ம சுத்தி' என்றே வைத்து, சிவபோகத்தை 'ஆன்மலாபம்' என்று அனைத்தையும் மூன்ருகவே கூறுகின்றது. 'இடைநின்ற 'சிவரூபம்' ஆன்ம தரிசனத்துள்ளும், 'சிவதரிசனமும்' 'சிவயோகமும்' ஆன்ம சுத்தியுள்ளும் உடனிகழ்ச்சியாகக் கொள்ளப்பட்டன. எனவே, இவையெல்லாம் வேறு வேறுபோலும் என மலையவேண்டா.

## சுத்தாவத்தைகள்

மாணுக்கன் :- தசகாரியங்களாகிய பத்தும், கேட்டல் முதலியனவாகிய நான்கும் வேறுவேருகாமையை அறிந்தேன். அவை நிற்க 'சாக்கிரம் முதலிய ஐந்தவத்தைகளும் பெத்தத்தில் (கேவல சகலங்களில்) நிகழ்தல்போலச் சுத்தத்திலும் நிகழும்' என்று முன்பு அருளிச்செய்தீர்கள். அவை சுத்தத்தில் நிகழ்தல் எவ்வாறு? அதனை அருளிச்செய்தல்வேண்டும்.

ஆசிரியர்: தத்துவமும், தாத்துவிகமும் ஆகிய கருவிகள் கூடுதல் பிரிதல்களினுற்றுன் சாக்கிரம் முதலிய அவத்தை வேறுபாடுகள் நிகழ்கின்றன என்பதையும், அவை அங்ஙனம் கூடியும் பிரிந்து வருமிடத்துப் பிரிந்தும் நிற்கின்ற நிலையில் உயிருக்கு அறியாமை மேலிட, உயிர் அதன்கண் அழுந்துதலே கேவல ஐந்தவத்தையும், புலன் உணர்வு மேலிட, அதன்கண் அழுந்துதலே சகல ஐந்தவத்தையும் ஆம் என்பதையும் நீ அறிந்திருக்கின்ருய். அங்ஙனமே கருவிகள் குறையக் குறைய உயிருக்கு அறியாமையாதல், புலனுணர்வாதல் உளவாகாது சிவானுபவம் உளவாதலே சுத்த ஐந்தவத்தைகளாம். ஆகவே, அவையும் மேற்கூறிய தசகாரிய நிலைகளில் அமைவனவாம். அவை அங்ஙனம் அமையுமாறு எங்ஙனம் எனின், சிவத்துவ அனுபவம், தத்துவ ரூபம் முதலிய நான்கினும் சிறிதுமின்றி ஆன்மதரிசனத்துக்கண் சிவரூபம் வாயிலாகச் சிறிதே தோன்றிமுதிருமாகலின், ஆன்ம தரிசனம், சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்னும் இவை முறையே சுத்த சாக்கிரம், சுத்த சொப்பனம், சுத்த சுத்தி சுழுத்த துரியம், சுத்த துரியாதீதம் என்னும் நிலைகளாம். ஆன்ம சுத்தி, சிவதரிசன சிவயோகங்களில் பகுதிப்பட்டு அடங்கும். எனவே, தசகாரியங்களுள் முதல் ஐந்தும் 'சுத்த சாக்கிரம்' என ஒருவாற்ருற் கூறப்படும் என்பது உணர்க.

யோக நிலைக்கண் இயமம் முதலாகக் கூறப்படும் எட்டுறுப்புக்களுள் இயமம், நியமம், ஆசனம் என்னும் மூன்றும் யோகத்திற்குச் சிறப்புறுப்பாகாது பொதுப்படநிற்ப, பிராணுயாமம் முதலிய ஐந்துமே அதற்குச் சிறப்புறுப்பாய் நிற்றலின், 'பிராணுயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன யோகத்திற் சாக்கிர முதலிய 'யோகாவத்தைகள்' எனப்படும். அவற்றையே சிலர் சுத்தாவத்தைகள் என மயங்குவர். ஞானமின்றி உயிர்க்குச் சுத்தம் கூடாமையின், அவற்றை, 'சுத்தாவத்தை' என்றல் பொருந்துமாறில்லை. இயமம் முதலிய மூன்றும்

யோகத்தின் உறுப்புக்களாகச் சொல்லப்படுதலின், அவற்றையும் பிரணுயாமத்தொடு கூட்டி, 'யோகசாக்கிரம் என்பர்.

## உபாய நிட்டை

மேற்கூறியவாற்ருல், 'சிவயோகமாகிய தெளிதலே சுத்த துரியம்' என்பதும், 'சிவபோகமாகிய நிட்டையே சுத்த துரியாதீதம் என்பதும் விளங்கும். இனி நிட்டையாகிய அதீத நிலையை அடைந்தோர், 'அதன்கண்ணே அழுந்தி மீளாது நிற்போரும், பண்டைப் பயிற்சி வயத்தால் மீள்வோரும்' என இருதிறத்தராவர். அவ்வாறு மீள்வோர் முன்போலக் கீழ் நிலையை எய்திப் பந்தத்தில் வீழ்ந்து கெடாது மேல் ஏறி நிட்டையின்கண் அழுந்துதற்பொருட்டுத் துரிய நிலையிலே நின்று முத்தி பஞ்சாக்கரத்தை முறைப்படி சுத்த மானதமாகக் கணித்தலும், தம்மைப்போலும் துரியநிலை எய்திய அன்பரோடன்றிப் பிறரொடு கூடாது குரு லிங்க சங்கமங்களைச் சிவனுகவே அறிந்து வழிபட்டு, உலகரோடு ஒட்டி வாழ்ந்தும் தாமரை இலையில் தண்ணீர்போலப் பற்றின்றிச் சிவனேடு ஏகராகி அவனருள்வழியன்றி ஒன்றும் செய்யாராய்த் தற்போதத்தைத் தவிர்த்து நிற்பர். அவர்க்கு அவர்பெற்ற சிற்றின்பம் பேரின்பமாகவே விளையும். அதனுல், அவர்க்கு ஆகாமியமும். அது வழியாக வரும் பிறப்பும் இல்லையாம். இந்நிலையே 'உபாய நிட்டை' என்றும் 'சாக்கிரத்தில் அதீதத்தைப் புரிதல்' என்றும் சொல்லப்படும்.

நிட்டையாகிய அதீத நிலையினின்றும் மீளும் தன்மை இல்லாத பெருமக்களையும் உலகத்தை உய்வித்தற்பொருட்டு இறைவன் இத்துரிய நிலைக்கண் மீள்வித்தல் உண்டு என்பது, திருந்தடி மறக்குமா றிலாத என்னை மையல்செய்திம் மண்ணின்மேல் பிறக்குமாறு காட்டினுய்" (சம்பந்தர் – பதிகம் 234.) "நெஞ்சினைத் தூய்மைசெய்து நினைக்குமா நினைப்பியாதே வஞ்சமே செய்தியாலோ வானவர் தலைவனே நீ" (அப்பர் - பதிகம் - 73.) "நீக்கி முன்எனைத் தன்னெடு நிலாவகை குரம்பையிற் புகப்பெய்து" (திருவாசகம் - அதிசயம்) "மாதவம் செய்த தென்றிசை வாழ்ந்திடத்-தீதிலாத்திருத் தொண்டத்தொகை தரப் - போதுவார் அவர்மேல் மனம் போக்கினர்" (பெரியபுராணம் - திருமலைச்-25.) என்பனபோலும் அருட்டிருமொழிகளால் அறியப்படும். இவ்வாறு தன்னுல் செலுத்தப்பட்ட தன் அன்பரைக் கொண்டே இறைவன் தான் உலகிற்கு உணர்த்தக் கருதும் உண்மைகளை உணர்த்தியருள்வன் என்பதைத் திருகளிற்றுப் படியார்,

" துரியங் கடந்தசுடர்த் தோகையுடன் என்றும்
பிரியாது நிற்கின்ற பெம்மான் — துரியத்தைச்
சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யும் தன்மைகளும்
ஆக்கியிடும் அன்பர்க் கவன் "

என்று கூறி, இதற்கு எடுத்துக்காட்டாகச் சமயகுரவர் நால்வரையே கூறியுள்ளது. இதனால் நால்வர் பெருமக்களும் இறைவன் திருவுளப்பாங்கினால் இத்துரியநிலைக்கண் நின்றவர் என்பது தெளிவாகின்றது.

இனி மேற்கூறிய ஞானச்செய்திகளின் வழி நிட்டைநிலையிற் சென்று மீண்டு இத்துரிய நிலைக்கண் நிற்போரது சுத்தான்ம சைதன்னியத்தையே இறைவன் தானாகக்கொண்டு வேறற நின்று பக்குவர்க்கு உபதேச வாயிலாகவும், நூல்கள் வாயிலாகவும், பிறவாறாகவும் உண்மை ஞானத்தை அருளுவன். என்பது உந்தி களிறு, உயர்போதம், சித்தியார் முதலிய மெய்கண்ட நூல்களில் நன்கு விளக்கப்பட்டது.

" ஏகனும் ஆகி அனேகனும் ஆனவன்
நாதனும் ஆனான் என் றுந்தீபற ;
நம்மையே ஆண்டான்என் றுந்தீபற.

நம்செயல் அற்றிந்த நாம்அற்ற பின்நாதன்
தன்செயல் தானேஎன் றுந்தீபற;
தன்னையே தந்தான்என் றுந்தீபற.

(திருவுந்தியார் - 5, 6.)

" ஆற்றால் அலைகடற்கே பாய்ந்தநீர் அந்நீர்மை
மாற்றி அவ் வாற்றான் மறித்தாற்போல்-தோற்றிப்
புலன்களெனப் போதம் புறம்பொழியின் நந்தம்
மலங்கள் அற மாற்றுவிக்கும் வந்து."

(திருக்களிற்றுப்படியார் – 10.)

"இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதல்தானே குருவுமாய் உணர்த்தும் என்றது அவன் அன்னியம் இன்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்."

(சிவஞானபோதம் - சூ 8. அதி. 2)

" ஞானயோ கக்கிரியா சரியை நான்கும்
ஈசன்றன் பணி; ஞானி நாலினுக்கும் உரியன்
ஆதலினல் யார்க்கும்
ஈனமிலா ஞானகுருவே குருவும் இவனே.

(சிவஞானசித்தி - சூ. 21-5.)

என்றுற்போல்வன காண்க. இவற்ருல் மெய்கண்ட தேவர் முதலிய உபதேசபரம்பரை ஆசிரியர்கள் சாக்கிரத்தில் அதீதநிலையில் நின்றே ஞானகுரவராய் விளங்கித் தம்மை அடைந்த பக்குவர் களுக்கு உண்மை ஞானத்தை வழங்கினர் என்பது அறியக் கிடக்கின்றது. அவ்வாசியர்பால் உபதேசம் பெற்ற மாணுக்கர்க்கு உண்மை ஞானம் கைவந்தமை அருணந்தி தேவர் தம் தற்போதம் நீங்கி மெய்கண்ட தேவரையே சிவமாகக் காணும் நிலையை எய்தினமையும், உமாபதி தேவரால் பெத்தான் சாம் பானும், முள்ளிச்செடியும் முத்தி பெற்றமையும் ஆகிய நிகழ்ச்சி களால் இனிது விளங்குவதாம். நிட்டை நிலையிற் செல்லு முன்னேஅதுகைவருதற்பொருட்டு இத்துரிய நிலையில்நிற்பாரும் உளர். அவர் ஓராற்ருல் ஆசாரியராதலன்றி மெய்கண்ட தேவர் முதலியோர் போலப் பரமாசாரியராகார் என்க.

மாணுக்கன் : அதீதமாகிய நிட்டை நிலையிற் சென்று மீண்டோர்க்கும் குரு லிங்க சங்கம வழிபாடும், பிற சமய ஒழுக் கமும் வேண்டுமோ ?

ஆசிரியர் : குரு லிங்க சங்கம வழிபாடும், பிற சமய ஒழுக் கங்களும் நிட்டைநிலையில் நின்று தம்மை மறந்தவர்க்கு உறங் கினேன்கைப் பொருள் அவனறியாது தானே விழ்ந்தொழிதல் போலத் தாமே நீங்கிவிடும். அவ்வாறு நீங்காது அவற்றைத் தற்போதத்தால் தாமே வேண்டா என விலக்கின் பிறசெயல்கள் வந்து பற்ற அவற்றில் இச்சையுண்டாகி மீளவும் பிறப்பிற்கு ஏதுவாம். ஆகவே இவ்வழிபாட்டை தற்போதத்தால் விலக்கச் செய்வதும் மல வாசனையேயாம். அதனல் அவ்வாசனை தாக்கா திருத்தற்பொருட்டு மேற்சொல்லிய அனைத்தும் எவ்வாற்ரு லேனும் துரிய நிலைக்கண் நிற்பார் விட்டொழிதல் கூடாதாம்.

மாணுக்கன் : அவ்வாருயின், சரியை முதலிய சாதனங்களில் நிற்பவர்க்கும், சாத்தியமாகிய ஞானத்தைப் பெற்றவர்க்கும் வேறுபாடு என்னை ?

( இதன் தொடர்ச்சி 438 ஆம் பக்கம் பார்க்க )

தருமையாதீனம் குருபூஜை விழாவில்



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
காவிரித் திருமஞ்சனத்திற்கு எழுந்தருளல்

தருமையாதீனக் குருபூஜை விழாவில்



ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
அன்பர்கள் புடைசூழ
சிவிகையில் பட்டணப்பிரவேசமாக எழுந்தருளல்



# திருமந்திரம் - குறிப்புரை

திருக்குறள்வேள்,

**திரு. ஜி. வரதராசப் பிள்ளை B. A.,**

( மலர் 29, இதழ் 7, பக்கம் 361 இன் தொடர்ச்சி )

82 ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு
ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள்
ஞானப்பா லாட்டி நாதனை அர்ச்சித்து
நானும் இருந்தேன்நற் போதியின் கீழே.

குறிப்புரை :- நந்திநகர் - ஆவடுதண்டுறை. ஒன்பது கோடியுகம் - ஒன்பது முடிவுகளுடன் கூடிய சந்திப்பு. ஏழு ஆதாரங்களுடன் நாதவிந்துக்களும் சேர்ந்து ஒன்பதாம். ஜீவனது நவகண்ட எல்லையைக் கடந்தால் அகண்டத்தில் இருக்கலாம் என்க. ஞானப்பால் - தோத்திரம்.

83 செல்கின்ற வாறறி சிவமுனி சித்தசன்
வெல்கின்ற ஞானத்து மிக்கோர் முனிவராய்ப்
பல்கின்ற தேவர் அசுரர்நரர் தம்பால்
ஒல்கின்ற வான்வழி யூடுவந் தேனே.

குறிப்புரை :- சிவமுனி - சிவத்தை முன்னி. சித்தசன் - காமன். ஒல்கின்ற - சூக்குமமாகிய. சிவத்தை முன்னி முனிவர் முதலாயினோர் வாழும் இவ்வுலகுக்கு விண்வழியாக வந்தேன் என்பதாம்.

84 சித்தத்தின் உள்ளே சிறக்கின்ற நூல்களில்
உத்தம மாகவே ஓதிய வேதத்தின்
ஒத்த உடலையும் உள்நின்ற உற்பத்தி
அத்தன் எனக்கிங் கருளால் அளித்ததே.

குறிப்புரை :- சிறக்கின்ற நூல்கள் - சிறப்பான நூல்கள். மனத்தின்கண் மேலாகக் கருதப்படுவது வேதம் என்க.

உடல் - சொல். உற்பத்தி - பொருள்.

அத்தன் வேதத்தின் சொல்லேயும் பொருளேயும் உணர்த்தி ஞன் என்பதாம்.

85 நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரந்
தான்பற்றப் பற்றத் தலேப்படுந் தானே.

குறிப்புரை :- வான்பற்றி நின்ற மறைப்பொருள் - ஆகாயத்தில் மறைந்துள்ள சிவன். ஊன் - உடம்பு. உணர்வுறு மந்திரம் - உணர்வினே உண்டாக்கும் மந்திரம். மறைப்பொருளேச் சிந்தித்தால் சிரசில் உணர்வு தோன்றும் என்க. தலேப்படுதல் - ஒன்று கூடுதல்

86 பிறப்பிலி நாதனேப் பேர்நந்தி தன்னேச்
சிறப்பொடு வானவர் சென்றுகை கூப்பி
மறப்பிலர் நெஞ்சினுள் மந்திர மாலே
உறைப்பொடுங் கூடிநின் ருேதலு மாமே.

குறிப்புரை :- மறப்பிலர் - மறவாதவர் ஆவர். மந்திர மாலே - திருமந்திர மாலே. உறைப்பு - உறுதி.

திருமந்திர மாலேயை ஓதுபவர் உள்ளத்து பிறப்பில்லாத நந்தி வெளிப்படுவான் என்பதாம்.

87 அங்கிமி காமைவைத் தானுடல் வைத்தான்
எங்குமி காமைவைத் தானுல கேழையுந்
தங்கிமி காமைவைத் தான்தமிழ்ச் சாத்திரம்
பொங்கிமி காமைவைத் தான்பொருள் தானுமே.

குறிப்புரை :- அங்கி - அக்கினி. உடலில் அக்கினியை மிகாமல் அளவுடன் வைத்தான் என்க. உலகு ஏழு - பூலோகம் முதலிய ஏழு. இவை அழியாது அக்கினியை அளவோடு வைத்தான் என்க. தமிழ்ச் சாத்திரம் - திருமந்திரம். மிகாமை வைத்தான் - குழப்பமில்லாதிருக்க ஒரு நூல் வைத்தான். பொருள்மிகாமை வைத்தான் - எல்லாப் பொருளும் இதன்கண் அடங்குமாறு வைத்தான்.

88 அடிமுடி காண்பார் அயன்மால் இருவர்
படிகண் டிலர்மீண்டும் பார்மிசைக் கூடி
அடிகண் டிலேன்என் றச்சுதன் சொல்ல
முடிகண்டேன் என்றயன் பொய்மொழிந் தானே.

குறிப்புரை :- அடியை மாலும் முடியை அயனும் என மாறுக. படி - வடிவம். அச்சுதன் - திருமால்.

அத்துணைச் சிறப்புடைய அடியையும் முடியையும் யான் கண்டேன் என்பது குறிப்பெச்சம்.

89 பெற்றமும் மானும் மழுவும் பிறிவற்ற
தற்பரன் கற்பனை யாகுஞ் சராசரத்
தற்றமும் நல்கி அடியேன் சிரத்தினில்
நற்பத மும்அளித் தான்எங்கள் நந்தியே.

குறிப்புரை :- கற்பனையாகும் - நிலையில்லாத. அற்றம் - அவசரம்.

அழிந்து போகின்ற உலகில் உண்மையினை விளக்கித் திருவடி தீட்சை செய்தான் என்பதாம்.

90 ஞேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை
மாயத்தை மாமாயை தன்னில் வரும்பரை
யாயத்தை யச்சிவன் தன்னை யகோசர
வீயத்தை முற்றும் விளக்கியிட் டேனே.

குறிப்புரை :- ஞேயம் - அறியப்படும் பொருள். ஞானம் - அறிவு. ஞாதுரு - அறிபவன். மாயை - அசுத்த மாயை. மாமாயை - சுத்த மாயை. பரை ஆயம் - பராசக்தியின் கூட்டம். அகோசர வியம் - சொரூப சிவத்தின் பிரபாவம்.

91 விளக்கிப் பரமாகும் மெஞ்ஞானச் சோதி
அளப்பில் பெருமையன் ஆனந்த நந்தி
துளக்கறும் ஆனந்தக் கூத்தன்சொற் போந்து
வளப்பில் கயிலை வழியில்வந் தேனே.

குறிப்புரை :- பரம் - பரம்பொருள். துளக்கறும் - நடுக்கமற்ற. கயிலை வழி - வெள்ளிமலை வழி. சோதி மண்டலம்.

92 நந்தி அருளாலே மூலனை நாடிப்பின்
நந்தி அருளாலே சதாசிவ னாயினேன்
நந்தி அருளால்மெய்ஞ் ஞானத்துள் நண்ணினேன்
நந்தி அருளாலே நானிருந் தேனே.

குறிப்புரை :- நந்தி அருள் - குரு அருள்.

மூலாதாரத்தில் இருக்கும் உருத்திரனை நினைந்து புருவ நடுவில் சதாசிவனைக் கூடி ஞானத்துள் இருந்தேன் என்பதாம்.

93 இருக்கில் இருக்கும் எண்ணிலி கோடி
அருக்கின்ற மூலத்துள் அங்கே இருக்கும்
அருக்கனும் சோமனும் ஆரழல் வீச
உருக்கிய ரோமம் ஒளிவிடுந் தானே.

குறிப்புரை :- இருக்கு - இருக்கு ரூபமான மந்திரம். அருக்கின்ற மூலம் - சூக்குமமான பிரணவத்தில். அருக்கன் - சூரிய கலை. சோமன் - சந்திரகலை. அழல் - அக்கினி கலை. ரோமம் ஒளி விடும் - மயிர்க்கால் தோறும் பொன்னொளி வீசும்.

இடகலையும் பிங்கலையும் சுழுமுனையில் ஓடினால் உரோமமானது உருக்கிய பொன்போல் விளங்கும் என்பதாம்.

94 பிதற்றுகின் றேன்என்றும் பேர்நந்தி தன்னை
இயற்றுவன் நெஞ்சத் திரவும் பகலும்
முயற்றுவன் ஓங்கொளி வண்ணம்எம் மானை
இயற்றிகழ் சோதி இறைவனு மாமே.

குறிப்புரை :- இயற்றுதல் - தியானித்தல். முயற்றுவன் - முயற்சி செய்வேன். இயற்றிகழ் சோதி - சுயம் சோதி

இறைவனும் ஒளிவண்ணனுமாகிய எம்மானை அடைய முயல்வேன் என்பதாம்.

## 6. அவையடக்கம்

95 ஆரறி வார்எங்கள் அண்ணல் பெருமையை
யாரறி வார்இந்த அகலமும் நீளமும்
பேரறி யாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேரறி யாமை விளம்புகின் றேனே.

குறிப்புரை :- அகலம் நீளம் - வியாபகம். வேர் - மூலம், அடி.

அண்ணலது பெருமையையும் தம் சிறுமையையும் கூறியதாம்.

96 பாடவல் லார்நெறி பாட அறிகிலேன்
ஆடவல் லார்நெறி ஆட அறிகிலேன்
நாடவல் லார்நெறி நாட அறிகிலேன்
தேடவல் லார்நெறி தேட அறிகிலேன்.

குறிப்புரை :- பாடுதல் - சிவனது புகழைப் பாடுதல் ஆடுதல் - பக்தி மேலீட்டால் தம் வசமிழந்து ஆடுதல். நாடுதல் - யோகத்தால் நாடுதல். நாடுதல் - ஞானத்தால் தத்துவ விசாரணை செய்தல்.

இந்நான்கு நெறியும் அறியேன் என்று இரங்கியவாறு.

( தொடரும் )

# "கொழிதமிழ்க் கூடலில் கொன்றை வேணியான்"

**வித்துவான். திருமதி. ப. நீலா**

(மலர் 29, இதழ் 8, பக்கம் 365ன் தொடர்ச்சி)

## 31. உலவாக்கிழியருளியது

விடைக்கொடியார் சவுந்தர சாமந்தன் பொருட்டுப் பரியுகைத்து வந்த பாங்கு கண்டோம். இனிக் கன்னிநாட னின் கவலையை உலவாக்கிழி தந்து மாற்றிய பரிசுகாண்போம்.

**மறையோர்களை மறந்தான் :**

மதிவழிவந்த மாறன் குலபூடணன் முறையாக எல்லா விரதங்களையும் மேற்கொண்டு சிவநெறிப்படி ஆட்சி செய்து வருகிருன். இருந்தும் எள்ளலில்லா வேதியர்களை இகழத் தலைப்பட நாட்டில் மழை மாறியது; வான் பெயல் மாறிட வளஞ் சுருங்கியது.

அறவோராகிய அந்தணர்கள் ஆகங்கிடந்த நூல் தவிர மறை நூலிழந்தார்கள். முனிவேள்வி, வானோர் வேள்வி, தென்புலத்திலுறைவோர் வேள்வி இவைகளை இழந்து; இழிந்த தொழில் செய்தேனும் உயிர் பிழைப்போம் என்று வேற்று நாடுகளுக்குப் புறப்பட்டனர்.

மற்றைய குடியினர் எந்நாடு செல்வோமென்று ஏங்கி சமயம் பார்த்திருந்தனர். அந்நாளில் ஒருநாள் - அது சோமவாரநாள். பாண்டி மன்னன் பொற்ருமரைப் பொய்கை யில் நீராடி சித்திவிநாயகப் பெருமானை வழிபட்டு அங்கயற் கண்ணி தழுவிய அழகிய சொக்கநாதரை அருச்சித்து மகிழ்ந் தான்.

**பிழையைக் காட்டிய பெருமான் :**

உலகின் உயிரான பெருமானே! 'என்னாட்சியில் உயிர்கள் பசியால் வருந்தி ஓலமிடுங் குரல் கேட்கிறதே. தான் தேடிய பொருளெல்லாமும் சிவபுண்ணிய தர்மங்களிலே செலவாயின. இனி இடும்பைதீர வழியாது! கூறியருள்க' என்று முறையிட்டான்.

அரவம் அரைக்கசைத்த கூடற்பெருமான் இவன் அந்தணர்களைப் பேணுதொழிந்த தவற்றுக்காகச் சிறிதே வருந்த வேண்டும் என்று எண்ணியவனாக வாளாவிருந்தான். அரசனோ இறையருள் பெறாததால் பெரிதுங் கவலைப்பட்டு அன்றிரவு உளம் வெம்பித் தரையிலேயே படுத்துத் துயின்றான். வெள்ளியம்பலத்துள் ஆடும் பெருமான் சங்கக் குழையோடும் சரிந்த கோவணத்தோடும் சித்தராய் வேடங்கொண்டு தென்னவன் கனவில் தோன்றினார். 'ஏடாரலங்கல் வரை மார்பா! என்பால் அன்பும் வாடா விரதச் செல்வமும் நீ பெற்றிருந்தாலும் ஒரு குறை உன்னிடமுள்ளது. மறைகளையும் அவற்றைப் போற்றும் அந்தணர்களையும் நீ போற்ற மறந்தாய்—மறைகளின் பெருமையினை நீ உணராயா—வேதமே நமது பீடிகை; அதுவே நமது பாதுகை. நமது வாகனமும் அதுதான். நமது காற்சிலம்பு வேதமே. நமது கோவணம், விழி, மொழி அனைத்துமே; ஏன்? நமது வடிவமே வேதவடிவந் தானே' என்று திருவாய் மலர்ந்தான்.

மறையே நமது பீடிகையா மறையே நமது பாதுகையாம்
மறையே நமது வாகனமா மறையே நமது நூபுரமாம்
மறையே நமது கோவணமா மறையே நமது விழியாகும்
மறையே நமது மொழியாகு மறையே நமது வடிவாகும்.

வேதமென்ற செங்கோல் நம் கையிலிருப்பது, அதோடு வேதம் நமதாணை யென்கிற சக்திவடிவாகி உயிர்களுக்கு அறிவு தந்து நிலைநிறுத்தி போகமுந் தந்து பின்பிரியா வீடுந் தரவல்லது. அப்படிப்பட்ட மறைகளை ஓதியும் காத்தும் வந்த அந்தணர்களை நீ காக்கத் தவறினமையால் மாரிமாறியது. இனி மும்மைப் புவனங்களும் உய்யுமாறு முத்தீவேட்கும் இவர்களை நம்மைப் போலவே கருதி நாளும் போற்றுக. அவர்கள் செய்யும் வேள்வியால் மழைபொழியும், பஞ்சமகலும் என்று அறிவுறுத்தி உலவாக்கிழியொன்றை அருளினார்.

'இந்த உலவாக்கிழி பெயருக்கேற்ப என்று முலவாது-வற்ருது- எத்துணைப் பொன்னை நீயெடுத்து வழங்கினாலும் நாம் தந்த அளவாகவே நிறைந்து மகிழ்வூட்டும். ஆகவே பெற்ற இக்கிழிகொண்டு வறுமையகற்றி வளங்காணுக' என்று கொடுத்து மறைந்தான் மறைதந்தான்.

## தென்னவனின் தெளிவு :

கண்ட கனவு உண்மை யென்பதை உலவாக்கிழி உறுதிப் படுத்த கௌரியர் கோன். பெருமான் திருவடியைத் தலைமேல் கொள்வான்போல் பொற்கிழியை உச்சியில் கொண்டு கூத்தாடினான். அமைச்சர் படைத்தலைவர்களை யழைத்து இந்த அற்புதத்தைக் காட்டினான். அப்பொற்கிழியை பொன் மேனியெம்மானாகவே கருதி அரிமான்சுமந்த ஆசனத்தில் வைத்து சங்கமும் மறைகளும் முழங்கச் சாந்து பூசி, மாலை யணிவித்து தூபதீப உபசாரமெல்லாஞ் செய்து பின் பொதியை யவிழ்த்து முத்தீவேட்கும் அந்தணர்களுக்கும், யாக காரியங் களுக்கும் எளியவர்களுக்கும் அள்ளி வழங்கினான்

அடுத்து நாளும் வரையாது வழங்க வழங்க அக்கிழி அடியார்க்குக் கொடுக்கக் குறையா வீட்டின்பம்போல் விளங் கியது.

பொன்னாலும் மணியாலும் கோயிலைப் புதுக்கினான். கொடியணிசெய் வாயிலையும் அறுகாற் பீடிகையையும் அழகு செய்தான். அள்ளக் குறையா நிதிக்கடலை முகந்தெழும் குலபூடணக் கொண்டல் தருமப்பயிரை சிறக்க வளர்த்தது

முந்திக் குறையா நிதிக் கடலை முகந்து முகந்து நாடோறுஞ்
சிந்திக் குலபூ டணக் கொண்டல் தெய்வ தருமப் பயிர் வளர்ப்ப
பந்தித் திரைமுந் நீர்மேகம் பருகிச் சொரியப் பல்வளனும்
நந்திக் கன்னி நாடளகை நகர்போற் செல்வந் தழைத் தன்றே

வேதம், உபநிடதம், ஸ்மிருதி, வியாகரணம், நியாயம் இவைகளில் வல்லார் பெருகினர், விரத, வேள்விகள் தழைத் தன. ஆகமங்களைப் போற்றுவோர் ஆண்டவனை ஏத்துவோர் யாவரும் அல்லலின்றி வாழ்ந்தனர்.

(வளரும்)

# சிவாகம ஸார ஸர்வஸ்வம்

சிவாகம வித்துவான், சிவாகமரத்நாகரம்,

**சிவஸ்ரீ. S. சுவாமிநாத சிவாசாரியார்**

( மலர் 29. இதழ் 7, பக்கம் 369 இன் தொடர்ச்சி )

தரித்ரம் உண்டாகும், கல் இருந்தால் பிணி உண்டாகும், கேசம் இருந்தால், மரணம் சம்பவிக்கும்.

— காமிகாகமம்.

சுத்தமான தனித்தனி பாத்திரத்தில் அன்னம் முதலிய வைகளை வைத்து அதன்மேல் ஒரு பத்திரத்தைப் போட்டு ஹ்ருதய மந்திரத்தினுல் புரோக்ஷித்து தாளத்ரயம் திக்பந்தனம் அவகுண்டனம் தேனுமுத்திரை காட்டி முறைப்படி நிவேதனம் செய்யவேண்டும், பக்ஷயம் போஜ்யம், பேயம் லேஹ்யம், சோஷ்யம் என்ற ஐவகைப் பதார்த்தங்களையும் பரிசேஷணம் செய்து ஹ்ருதய மந்திரத்தினுல் அந்த போஜன சாதனத்தை நடுவிரல் அணிவிரல்களைப் பெருவிரலுடன் சேர்த்து ஆசாரியன் கையைத் தூக்கி கௌரியின் கையில் அளித்து கௌரியின் கைமூலமாக இறைவனுடைய ஹஸ்தத்தில் சமர்ப்பித்து நிவேதனம் செய்யவேண்டும். யானையினுல் உட்கொள்ளப்பட்ட விளாங்கனிபோல சாரத்தை இறைவன் கொள்ளுகிருர்.

— காரணம்.

ரஸ பூர்ணமான தேங்காயை த்ரயம்பகம் என்ற மந்திரம் கூறி ஒரு உடையில் இரண்டு துண்டாகும்படி சமமாக உடைத்துக் குடுமி நீக்கி நிவேதனம் செய்யவேண்டும். வாசனையுள்ள பாக்குடன் கூடிய தாம்பூலம் பழம் முதலியன நிவேதனம் செய்து கற்பூர ஆராதனை செய்யவேண்டும்.

— சந்தானகமம்.

अग्नौ वा निऋतौ वा पि स्थित्वा देवं समर्चयेत् ।
नप्राच्याभग्रतः तिष्ठेन्नोत्तरे योषिदाश्रये ॥
नप्रतीच्यां यतः पृष्ठं तद्दक्षे देव मर्चयेत् ।

சுவாமியின் வலதுபுறமிருந்து அர்ச்சிக்கவேண்டும். அதாவது கிழக்கு நோக்கிய ஆலயத்தில் தென்கிழக்கிலிருந்தும் மேற்று நோக்கிய ஆலயத்தில் தென்மேற்கிலிருந்தும் பூஜிக்க வேண்டும். சுவாமியின் எதிரிலிருந்து பூஜிக்கக்கூடாது. (நெற்றிக்கண் இருப்பதால்) இடதுபுறம் இருந்து பூஜிக்கக் கூடாது. (தேவியிருப்பதால்) மேற்கிலிருந்தும் பூஜிக்கக் கூடாது. (பின்புறமாகையால்)

ஆவாஹன காலத்தில் ஆசாரியன் குருரூபனுகவும் அபிஷேக காலத்திலும் அலங்கார காலத்திலும் ஆசாரியன் தாய்போன்றவனுகவும், நிவேதன காலத்தில் ஆசாரியன் மந்த்ரவடிவனுகவும் ப்ரதக்ஷிண நமஸ்காரத்தில் ஆசாரியன் பக்தவடிவனுகவும் இருக்கவேண்டும். — வசனரத்னுவளி.

மூல மந்திரத்தை 108 தடவை ஜபித்து குச புஷ்பாக்ஷதையுடன் சுளுகோதக சமர்ப்பணம் செய்யவேண்டும்.

— ஷட்சஹஸ்ரிகா.

பின்பு பலி நித்யாக்னிகாரியம் நித்யோத்ஸவம் முதலியன செய்து ப்ராதக்கால பூஜையை முடிக்கவேண்டும்.

நித்யாக்னிகாரியம் பாகசாலையில் அமைக்கப்பட்ட குண்டத்தில் முறைப்படி செய்யவேண்டும். நித்யாக்னிகாரிய குண்டத்தில் அக்னி எப்பொழுதும் பாதுகாப்பாக இருக்க வேண்டும். அக்னி அணைந்துவிட்டால் மறுபடி சம்ஸ்காரம் செய்யவேண்டும்.

இவ்வாறு காலசந்தி பூஜை, $7\frac{1}{2}$ நாழிகை வரையில் செய்துமுடித்துப் பிறகு சங்கம காலமான $12\frac{1}{2}$ நாழிகை வரையில் தரிசனுர்த்திகள் தரிசன யோக்ய காலமாகும். இதன் பிறகு $7\frac{1}{2}$ நாழிகை மாத்தியந்தின காலம் (உச்சிக்காலம்) இது மஹாசந்தியாகும்.

உச்சிக்காலம் :

मध्याह्नसमये प्राप्ते स्नपनं पञ्चगव्यकम् ।
द्वारपूजां प्रकल्प्याथ वास्तुनाथं प्रपूजयेत् ॥

लिङ्गशुद्धिं ततः कृत्वा गन्धपुष्पैरलंकृतम् ।
भोगांगं पूजयेत्पश्चात् नैवेद्याद्युपचारकम् ॥
गौरीपूजां ततः कृत्वा चण्डान्त पूजयेत्गुरुः ।

உச்சிக்கால பூஜையில் ஸ்னபனம் பஞ்சகவ்யத்துடன் த்வாரபூஜை வாஸ்துப்ரும்மபூஜை இலிங்கசுத்தியுடன் போகாங்கபூஜை நைவேத்யம் முதலிய உபசாரத்துடன் கௌரீபூஜை செய்து சண்டேச பூஜை வரையில் செய்து முடிக்கவேண்டும். ஸ்னபனம் என்பது ஒன்பது விதமாகும். அதாவது, ஒன்பது கலசஸ்னபனம், பதினேழு கலச ஸ்னபனம், இருபத்திஐந்து கலச ஸ்னபனம் என்ற மூன்றும் அதமத்ரயம்.

நாற்பத்து ஒன்பது கலச ஸ்னபனம் (49) எண்பத்துஒரு கலச ஸ்னபனம் (81) அஷ்டோத்தரசத கலச ஸ்னபனம் (108) என்பது மத்தியம த்ரயம். இருநூற்று ஒன்பது (209) கலச ஸ்னபனம், நானூற்று ஒன்பது (409) கலச ஸ்னபனம் ஆயிரத்து ஒன்பது (1009) கலச ஸ்னபனம் உத்தமத்ரயம் ஆக ஒன்பது விதமாம்.

— தீப்தாகமம்.

சங்க்ராந்தி, விஷு, சூரிய சந்திரக்ரஹணம் தீக்ஷையின் முடிவு, ப்ரதிஷ்டையின் முடிவு, மண்டலாபிஷேகத்தின் முடிவு, கிருத்திகாதீபம், எஜமானனுடைய ஜன்மநக்ஷத்திரம், கல்யாணம், ராஜாபிஷேகம், யுத்தாரம்பம், அதிவிருஷ்டி, அனுவிருஷ்டி, துர்பிக்ஷம், பூகம்பம், ஜ்வரமாரி உபாதைகள் சத்ருபாதை, க்ருஹபீடை இவைகளில் இந்த ஸ்னபனங்களில் சமயத்திற்குத் தக்கவாறு செய்யவேண்டும். விசேஷத்திற்கு விசேஷ பலன் உண்டு.

— தீப்தாகமம்.

நித்யஸ்னபனம், நவகலச ஸ்னபனம் அபிமதம்.

तस्माद्दाचार्यवर्येण पञ्चगोचर वर्त्तिना ।
शैवागम परिज्ञान पारगेण क्रियावता ॥
क्रिया निवर्तनीयस्स्या त्स्वस्यराष्ट्राभिवृद्धये ।
गुरोर्गुत्तरूरो ग्राह्यः शिवशास्त्र विशारदः ॥

तेनैव स्नपनाद्यंतु कारयेत्मुनिसत्तमाः ।
विशेष पूजा तेनैव वर्तनीयेष्ट सिद्धये ॥

— उत्तरकामिकागमम्

பஞ்சகோசர வர்த்தியாயும் சைவாகமங்களை நன்கு அறிந்தவராயும், கிரியையில் வல்லவராயும் குருவுக்கும் குருவாயும் சிவ சாஸ்திரங்களில் மிகுந்த அறிவாளியும் இருக்கிற ஆசாரியனைக் கொண்டு விசேஷ ஸ்னபனங்களைப் பூஜை செய்யும்படிச் செய்யவேண்டும். அவ்வாறு செய்தால் இஷ்ட சித்தி உண்டாகும்.

— உத்தரகாமிகம்.

ஆதிசைவ குலத்திலுதித்தவராய் பஞ்சகோசரவர்த்தியாய் எல்லா சாஸ்திரங்களிலும் தத்வமறிந்தவராய், சைவ சித்தாந்த ஞானமறிந்தவராய், எல்லா அங்கங்களும் நிறைந்தவராய் குறைவான அங்கமோ அதிகமான அங்கமோ இல்லாதவராய் பதினாறு வயதிற்குமேல் எழுபது வயதிற்குட்பட்டவராய் செய்நன்றி மறவாதவராய், தர்சனீயராய், க்ருஹஸ்தராய், கிரியை முதல் ஞானம் வரையிலுள்ள சாஸ்திரங்களில் நிச்சயமான புத்தியுடையவராய் உள்ள ஆசாரியர் சிறந்தவர்.

— சுப்ரபேதாகமம்.

आचार्यः पत्निहोनोऽपि पुत्रवानग्निमान् भवेत् ।

ஆசாரியன் அபத்னீகனாகவிருந்தாலும் புத்ரவான் அக்னிமானாகும்.

ருத்ராக்ஷம், யக்ஞோபவீதம், உஷ்ணீஷம், உத்தரீயம், விபூதிப்பை என்ற ஐந்து முத்திரையும் ஆசாரியனுக்கு இருக்க வேண்டும்.

உருத்ராக்ஷத்தைத் தரிக்காமல் எவர் சிவபூஜை செய்கிறாரோ அந்தப் பூஜை சாம்பலில் செய்யப்பட்ட ஆகுதி போல் ஆகும்.

— காலோத்ராகமம்.

( தொடரும் )

# *மெய்கண்டார்

செஞ்சொற்கொண்டல், புலவர்,

**திரு. சொ. சிங்காரவேலன்** M. A., Dip. Ling.

வெள்ளிமலை மீதுறையும் வள்ளலடி கண்டு
வெள்ளிவிழாக் கொள்கின்ற எந்தவத்து வேந்தர்
உள்ளிருக்கும் சேவடிகள் உறுதுணையா நிற்ப
தெள்ளியசெந் தமிழாலே தேன்கவிகள் சொல்வேன்! (1)

இரணியனின் ஆணவத்தை அடக்குதற்கே
இதிகாச நரசிம்மர் வந்தார் அன்று;
முரணிநின்ற நிர்வாகக் குழப்பந் தீர்க்க
முளைத்துள்ள நரசிம்மர் இவர்தான் என்பேன்!
அரணாகும் அறநிலைய ஆட்சி தன்னை
அரனாரின் அருளாலே ஏற்று நின்ற
பரணாகும் இவர்என்றால்; இவர்மேல் வைத்த
பாரத்தைப் பெரும் பொறுப்பைப் பாடலாமோ? (2)

'நான்கடவுள் நான்கடவுள் நான்கடவுள்' என்றே
தேன்தடவித் தேன்தடவித் தென்றமிழ் நாட்டில்,
ஊன்தடவி ஊன்தடவி உளஞ்சலித்த போதே
வான்தடவி வந்தபுகழ் வள்ளலிவன் வந்தான்! (3)

'உனையறிந்த நிலையுண்டோ உனையறிந்த பின்னே
தனையறிய வேண்டுமடா தருக்கதிகம் கொண்டே
நினையறிய நினையறிய நேருமடா இன்பம்
தினையளவும் தேராமல் திகைத்திடலா காதே. (4)

---

* தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் திருமுன்பு, திருநெறிய தெய்வத் தமிழ் மாநாட்டுக் கவியரங்கில் (17–5–'70) பாடப்பெற்றது.

என்றுரைக்க வந்தபிரான் இவனொருவ னன்றோ ?
கன்றுரைக்கத் தாயருகிற் களிப்பொடணை குதல்போல்,
ஒன்றெனுமெய்ப் பொருளடைந்த உவகையுரைப் பேனோ ?
கொன்றனன்பொய் யுணர்வனைத்தும், கூறினனே உண்மை !

ஆறிரண்டு நூற்பாவின் அனைத்துலகும் சொன்னான் !
மீறிவருந் தத்துவங்கள் மெய்விளங்கச் சொன்னான் !
தேறிவரும் பிரமாணம் சாதனங்கள் எல்லாம்
கூறிவரும் மேதையிவன் கூறுமுரை மெய்யே ! (6)

( வேறு )

சீகண்ட பரமசிவன் பாதம் போற்றித்
திருநந்தி தேவரவண் பெற்ற ஞானம்
மேகங்கள் திரண்டதெனத் திரண்டொன் றாகி
மிகுமுனிவர் நால்வரிடைப் பெருகி நிற்ப,
யோகங்கள் பயில்சத்ய நெறியில் நின்ற
உயர்ஞான தரிசனிகள் உவந்து பெற்றார்
தாகமெழப் பரஞ்சோதி முனிவர் அந்தத்
தண்ணருளைப் பெற்றொளியே தழைத்து நின்றார். (7)

பரஞ்சோதி முனிவரிடம் சிவஞா னத்தைப்
பக்குவமாப் பெற்றவரே மெய்கண் டாராம்;
கரஞ்சோதி மலரென்றால், கண்கள் தாமோ
கவின்மலராம் ; சேவடிகள் தாமரைப்பூ !
வரஞ்சோதி யுடனருளும் திருவாய் பூவாம் ;
வாய்மணக்கும் அருளுரையோ பூவின் தேனும் !
தரஞ்சோதித் தறிந்திடயார் தரமோ இங்கே ?
தத்துவநூல் சிவஞான போதம் தந்தான் ! (8)

தெருமண்ணிற் படிந்தாடிச் சிறுவரோடே
சிறுதேரை உருட்டியிடும் சிறிய பிள்ளை !
கருமண்ணிற் பிறவாமற் காத்தாட் கொள்ளக்
கருணைமலர் கின்றவிவன் புழுதியாடி
உருமண்ணிற் புரளுவதோ ? ஆமாம் ; உண்மை !
உலகாளப் பிறந்தவர்கள் தோற்றம் கண்டால்
வெறுமண்ணிற் புரண்டவர்தாம் ; தமது வாழ்வில்
வித்தகங்கள் பலகண்டோர், நிலைத்து வாழ்வோர்!(9)

புறக்கடையின் தொழுவத்தில் பிறந்த பிள்ளை
புன்னெறிகள் போக்கிடவே பின்னுள் வாழ்ந்து
இறக்கையிலும் சிலுவையிலே உவகை பூத்தே
இருகண்கள் நீர்வார, 'இறைவா! இன்னோர்
புறக்கணிப்பிற் குரியரலர்; பிழைகள் தம்மைப்
பொறுத்தருளாய்' என்றிரந்த புனிதச் செல்வன்!
அறக்கருணை இயேசுபிரான் என்பர் என்றால்,
அருளாளர் தோற்றத்தில் பேதம் இல்லை. (10)

விண்வழியே பரஞ்சோதி விரைந்த போது
வெண்ணெய்நல்லூர் வீதியிலே கண்கள் ஓடக்
கண்வழியே உளம்புகுந்தார் கள்ளப் பிள்ளை;
ககனவழி மறந்துவிட்டார் தவத்தின் செம்மல்!
மண்வழியே அருள்வழியக் கருணைவெள்ள
மதுவழியப் பூஞ்சிரிப்புச் சிரித்த பிள்ளை,
பண்வழியே ஓடுகின்ற இதயம் போலப்
பரஞ்சோதி முனிவரவர் நெஞ்சிற் போந்தார். (11)

திருநெறியாஞ் சிவநெறிக்கு வரம்பு காட்டத்
திருவருளும் தூண்டிடவே முனிவரங்கே,
குருவடிவாய்க் குழந்தையருள் வெள்ளம் தோயக்
கொடுத்தருளி விண்பறந்தார்; பிள்ளை யாரோ
பெருநெறியா மன்புநெறி தோய்ந்து நின்றே
பெருஞானப் பிழம்பாகி ஒளி விளங்க,
அருநெறியாம் சித்தாந்த ஞானம் பொங்க
அமர்ந்திருந்தார்: வையகமே வியந்த தன்றோ. (12)

திருமுறையிற் கயிறணைத்துக் கண்டபோது
திருஞான சம்பந்தர் தேவா ரத்துத்
திருவெண்காட் டருந்தமிழில், அருள் மணக்குந்
திருப்பாட்டாம், 'பேயடையா; பிரிவே எய்தும்!
மருவிடுவர் பிள்ளையினை; நினைத்த வாறே
மனங்களிப்பப் பெறுவர்' என வந்த தாலே,
கருவுதித்த இளம்பிள்ளை, சிவபிரானின்
கருணையினால் மாப்பிள்ளை' ஆனாரிங்கே! (13)

கைகண்ட தவஞானம்; இரண்டே ஆண்டில்
கருக்கிருட்டில் முளைக்கின்ற கதிரோன் போலப்
பொய்கண்டு தெளியாதே, உலகில் ஞான
போதநெறி இயல்பாக வாய்க்கப் பெற்ற
மெய்,கண்டார் எல்லாரும் விளங்கு கின்ற
மேன்மை கண்டு, வியந்தெழுந்து பாதம்போற்றி
'மெய்கண்டார் மெய்கண்டார்' என்றே ஏத்த
மெய்கண்டா ராகிநின்ருர் இளைய செம்மல்! (14)

கல்லாலின் நிழலமர்ந்த பெருமான் பெற்ற
கருணையினுன் திருப்பாதப் போதுதன்னை,
சொல்லாலே புனைகின்ற திறத்தி னேடே
சொல்லலுற்ற சிவஞான போதம் தன்னில்,
நல்லார்கள் வியந்தேத்த, 'அழிக்க லுற்ற
நாயகனே படைப்பவனும்' என்றெடுத்தே,
'இல்லாத பொருளில்லை' என்று கூற
இயம்பினுன் திருநூலை இயம்பி னுனே. (15)

உலகத்தை மூன்ருகப் பகுத்துக் கூறி
ஒடுக்குவதில் இவனுக்கே இணையிங் குண்டோ?
உலகத்தின் தோற்றத்தை உரைத்தான் பின்னர்;
உயிரினத்தின் ஒளியுரைத்தான்; எடுத்துப் போற்ற
இலகுகின்ற நிலைகாட்டி, ஞானந் தன்னை
எய்துதற்கே நாலிரண்டாம் நூற்பாத் தந்தான்!
விலகுகின்ற நிலைகூறி, பாசமென்னும்
விலக்கரிய நிலைமறைத்தல் தன்னைச் சொன்னுன்!

காணுகின்ற கண்ணுக்குக் காட்டும் நெஞ்சம்;
கண்டிடவே உள்ளத்தைக் கண்டு காட்டும்
பேணுகின்ற நிலைகாணீர்! உலகத் தீரே!
பிரானுக்கே 'அயராத அன்பு' கொண்டே,
தோணுகின்ற 'அரன்கழலில்' வீடு கொள்வீர்!
துன்னிடிலே இதுவன்ரே சீவன்முத்தி!
நாணுகின்ற நிலைமாறி வையமெல்லாம்
நலந்தெரிய வழிபாடு வேண்டு மன்ரே? (17)

(தொடரும்)

# வீரசோழியம்

டாக்டர் செ. வை. சண்முகம் M. A., M. Litt, Phd.

(மலர் 29, இதழ் 7, பக்கம் 373 இன் தொடர்ச்சி)

## 5. 2. சொல்லதிகாரம் :

நீம், நீங்கள் என்ற முன்னிலை தன்மை வடிவம் தேவாரத்திலும் சீவகசிந்தாமணியிலும் பயின்றுவரினும் ஒரு இலக்கண ஆசிரியரும் இவ்விரு வடிவத்தையும் குறிப்பிடவில்லை. அவ்வாறே செய்தால் என்ற வினையெச்ச வாய்பாடு புறநானூறு பரிபாடல், சிலம்பு போன்ற பழந்தமிழ் இலக்கியத்தில் ஓரிரு முறையும் இடைக்காலத்தில் பன்முறையும் பயின்று வந்த போதிலும் இவ்வாய்ப்பாட்டை ஒரு இலக்கண ஆசிரியரும் குறிப்பிடவில்லை.

| | | |
|---|---|---|
| கண்டால் | — | புறம் 390 25 |
| மடுத்தால் | — | பரிபாடல் 20.42 |
| போனால் | — | மணிமேகலை 6 158 |
| புணர்ந்தால் | — | சிலம்பு 7.2.2 |

செய்பாக்கு என்ற வினையெச்சத்தைப் புத்தமித்திரனார் குறிப்பிடவில்லையே தவிர ஏனைய இரு இலக்கண ஆசிரியர்களும் குறிப்பிட்டுள்ளனர்.[6] அந்த வினையெச்சம் திருக்குறளிலேயே வந்துள்ளது.

| | | |
|---|---|---|
| வேபாக்கு | — | திருக்குறள் 1128 |
| கரப்பாக்கு | — | ,, 1227 |

எதிர்மறை வினையெச்சம் செய்யாது என்ற வாய்பாட்டிலேயே சங்க இலக்கியத்தில் பெரும்பான்மையும் வந்துள்ளது. பத்துப்பாட்டிலும் கலித்தொகை சிலம்பு மணிமேகலை ஆகிய நூற்களிலும் செய்யாமல் என்ற வாய்பாடு பயின்று வந்துள்ளது

---

[6]டாக்டர் செ. வை. சண்முகம் "இடைக்கால இலக்கணங்கள் நேமிநாதம்" தமிழ்ப்பொழில் 42.148 (1969)

தருமையாதீனக் குருபூஜை விழாவில்



திருக்கயிலாய தரிசன நினைவு வளைவுக்கருகில் சைவமெய்யன்பர்களுடன்
ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
பட்டணப்பிரவேசக் காட்சி

தருமையாதீனக் குருபூஜை விழாவில்



தருமை, துறைசை ஆதீன அடியவர் திருக்கூட்டத்தினருடன்
ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்
பட்டணப்பிரவேசக் காட்சி

படாமல் மலைபடுகடாம் 365
காணுமல் கலித்தொகை 39.42
ஞெகிழாமல் சிலம்பு 1.61

ஆனல். வீரசோழியம் இவ்வெதிர்மறை வாய்பாட்டைத் குறிக்க வில்லை இவற்றையெல்லாம் இலக்கண ஆசிரியர்கள் குறிப்பிடா ததற்குக் காரணம் இலக்கண ஆசிரியர் அறிந்த கிளைமொழியில் (dialect) அவை வழங்கவில்லை என்பதாகலாம். மேலும் அவற் றைக் கொச்சை மொழியாகவும் (Colloguial language) கருதி யிருக்கலாம். எவ்வாருயினும் இடைக்காலத் தமிழை ஆராயும் போது இவ்வுண்மைகளையும் ஒருவர் அறிந்து கொள்ளல் வேண்டும்.

6 வீரசோழியத்தால் அறியப்படும் பிற செய்திகள் :

ஆய்தம் உயிரெழுத்துக்கும் மெய்யெழுத்துக்கும் இடையில் வைக்கப்பெற்று நடுவெழுத்து என வழங்கப்பட்டது இன்றும் ஆய்தம் அவ்வாறே வைக்கப்பெறுவதால் இம்முறை பத்தாம் நூற்ருண்டிலிருந்தோ அல்லது அதற்கு முன்னரோ ஏற்பட்டிருக் கலாம். ஏனெனில் தொல்காப்பியர் ஆயுதத்தைச் சார்பெழுத் தோடு சேர்த்துப் பேசியுள்ளார். அவிநயத்தில் இதற்கான ஆதாரம் இருப்பதாக அறிகிறேம்.[7]

ஏகாரமும் ஓகரமும் புள்ளியிட்டு எழுதப்பட்டன. இது தொல்காப்பியர் காலத்திலிருந்த பழக்கம் வீரசோழிய காலத்தி லும் நன்னூல் காலத்திலும்கூட நடைமுறையில் இருந்துவந்திருக் கின்றது.

எய்தும் எகரம் ஒகரம் மெய்புள்ளி (நன்னூல் 98)

இனவெழுத்து என்று நன்னூலார் குறிப்பிடுவதை புத்த மித்திரனர் வர்க்கவெழுத்து என்று குறிப்பிட்டுள்ளார். ஆயினும் புத்தமித்திரனர் வல்லெழுத்தோடு ஒரே இடத்தில் பிறக்கும் மெல்லெழுத்துக்களை மட்டும் குறிக்க பவணந்தியார் நெட்டெழுத் திற்கு இணையான குற்றெழுத்தையும் சேர்த்து வழங்கியுள்ளார்.[8]

---

[7] G. Vijayavenugopal 'A Modern Evaluation of Nannul Page 72 (Annamalainagar 1968)

[8] Ibid, Page 78.

மெய்மயக்கத்தில் இரண்டு மெய்கள் சேர்ந்து வருவதை ஈரொற்று உடனிலை (The consonant clusters) என்றும் மூவொற்று உடனிலை (Three consonant clusters) என்றும் இருவகையாகப் பிரித்துள்ளார். புத்தமித்திரனார் தமிழில் மூன்று மெய்யெழுத்துக்குமேல் சேர்ந்து வாராததால் அவ்விரு பிரிவுமே போதுமானது. தொல்காப்பியர் ஈரொற்று உடனிலை என்று மூவொற்று உடனிலையைக் குறித்துள்ளார் அதற்குக் காரணம் மூவொற்று உடனிலையில் இரண்டு மெய்யெழுத்துக்கயே இருக்க மூன்றாவது மெய்பின்னால் வரும் உயிரோடு சேர்ந்து உயிர் மெய்யாகவிருப்பதே ஆகும். சான்றாக பார்க்க (pa: rkka) என்ற சொல்லில் மூவொற்று உடனிலையில் ர்க் என்ற இருமெய் யெழுத்துக்களே வந்துள்ளதை அறியலாம்.[9]

முடிவுரை :

வீரசோழியம், தன்னுடைய முக்கிய நோக்கமான தமிழ் மொழி அமைப்பை விளக்குவதில் தவறிவிட்டது என்றே கூறலாம்.

மணிப் பிரவாள நடை தமிழகத்தில் ஏறத்தாழ பத்தாம் நூற்றாண்டில் துவங்கியது என்பர்.[10] அதனால் தமிழில் நிறைய வடமொழிச் சொற்கள் புகலாயின. அவ்வாறு புகுந்த சொற்களுக்கு உரிய இலக்கணமாக வேண்டுமானால் வீரசோழியத்தி லுள்ள வடமொழிக்குரிய இலக்கணங்களைக் கொள்ளலாம். ஆனால் வீரசோழிய ஆசிரியர் செய்த தவறு வடமொழி மரபைத் தமிழில் புகுத்தியது. ஒரு மொழி இலக்கணத்தை மற்றொரு மொழி இலக்கணத்தை அடிப்படையாகக்கொண்டு ஆராயக் கூடாது என்பது இன்றைய மொழியியல் வற்புறுத்தும் அடிப் படை உண்மைகளுள் ஒன்று. இலக்கண ஆராய்ச்சிக்குப் பெருந்தேவனாரின் திருத்தம் குறைவானதாயினும் அவை ஒத்துக் ஒத்துக்கொள்ளக்கூடியன.

[9] Dr S. V. Shanmugam, Naccinarkkiniyar's conception of Phonology P. 67 (Annamalainagar, 1967)

[10] About the beginning of the second millenium A. D a new style called Manipravalam comes into vogue' Prof: T. P. Meenakshisundaram, A History of Tamil language P. 174 Poona, 1965)

அவ்வாறே தமிழ் மொழியில் தொல்காப்பியர் காலத்திற்குப் பிறகு ஏற்பட்ட மாற்றத்தை ஓரளவு நன்கு காட்டியுள்ளது. பல விதிகள் இலக்கிய வழக்கிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. ஆயினும் வீரசோழியமும் சில வளர்ச்சிகளைக் குறிப்பிடவில்லை என்பதும் மேலே விளக்கப்பெற்றுள்ளது. எனினும் பிற்கால இலக்கண ஆசிரியர்கள் இவர் கூறியுள்ள பல மாற்றங்களைக் கூடத் தம் நூலில் குறிப்பிடவில்லை. எனவே, வீரசோழியம் தமிழ் மொழி வரலாற்று அறிவுக்குப் பெரிதும் துணைபுரிந்துள்ளது என்பது தெளிவு.

வீரசோழியம் தமிழ் இலக்கண ஆராய்ச்சிக்குத் தந்த திருத்தமும் மொழி வரலாற்றுக்குத் தந்த செய்திகளும் பாராட்டத்தக்கதாயினும் தமிழ் அமைப்பைச் சரியாக விளக்காததாலும் வடமொழி மரபைப் புகுத்தியதாலும் பிற்காலத்தில் அது சரியாகப் போற்றப்படாதது ஆயிற்று.

(முற்றும்)

---

( 418 ஆம் பக்கத்தொடர்ச்சி )

ஆசிரியர் : நன்ருக வினுவினை ! பொருளற்ற வறியவர்கள் பொருளைப் பெறுதற்கு ஓடி உழைக்க வேண்டுவது இன்றியமையாதது; பொருளுடைய செல்வர்கள் ஏன் ஓடி உழைக்க வேண்டும் ? ‘செல்வர்கட்கும் சோம்பல் கூடாது; உழைப்பு வேண்டும்’ என்று சான்ருேர்கள் கூறுகின்ருர்களே !

மாணுக்கன் : ஆம் ! வறியவர்கள் பொருளைப் பெறுவதற்கு உழைக்கின்ருர்கள்; செல்வர்கள் பெற்ற பொருளை அழியாமற் காக்க உழைக்கின்ருர்கள். “பொருளாட்சி போற்ருதார்க்கு இல்லை” குறள் (1-252.) அன்ருே ?

ஆசிரியர் : அம்முறைதான் இங்கும் உள்ளது. சாதனத்தில் நிற்போர் ஞானத்தைப் பெறவேண்டிக் குரு லிங்க சங்கம வழிபாட்டை மேற்கொள்கின்றனர்; ஞானத்தைப் பெற்றவர்கள் அது நீங்காது நிலைத்து நின்று நிட்டைநிலை எய்தவேண்டி குரு லிங்க சங்கம வழிபாடுகளை மேற்கொள்ளுகின்றனர். அவ்வாருயினும் வறியவரது உழைப்பிற்கும், செல்வரது உழைப்பிற்கும் வேறுபாடு பெரிதாய் இருத்தல்போலச் சாதனத்தில் நிற்போரது வழிபாட்டிற்கும், சாத்தியமாகிய ஞானத்தைப் பெற்ருேரது வழிபாட்டிற்கும் வேறுபாடு பெரிது.

மாணுக்கன் : அவ்வேறுபாடுகள் யாவை ?

ஆசிரியர் : முதலாவது வேறுபாடு அஞ்செழுத்தின் வகைகளாகிய தூலம், சூக்குமம், காரணம் முதலியவை. அவைகளை உனக்கு உபதேசத்திற் சொல்லியிருக்கின்ருேம். அவற்றிற்கேற்ப, ‘பாவனை’ எனப்படும் கருத்துவகைகளும் வேறு வேரும். அவைகளைச் சொல்கின்ருேம்.

சரியையில் நிற்போர், ‘குரு லிங்கங்களாகிய திருமேனிகளையும், சங்கமங்களில் திருநீறு, கண்டிகை முதலிய திருக்கோலங்களையுமே ‘சிவம்’ எனக்கொண்டு வழிபடுவர். அவர்கட்குச் சிவபிரான் எக்காலத்தும் வெளிப்படாது அங்கு மறைந்து நின்றே அருள்புரிவான். கிரியையில் நிற்போர், மேற்கூறிய இடங்களில் அவ்வவற்றைத் தாம் போற்றும் மறைமொழிகளாலும், அம்மறைமொழிகட்கேற்பத் தாம் எண்ணும் எண்ணத்திலுைம் செய்கைகளினுலுமே அங்குச் சிவவிளக்கம் உண்டாவதாகக் கொண்டு வழிபடுவர். அவர்கட்குச் சிவபிரான் விறகைக் கடையும் பொழுது நெருப்புத் தோன்றுதல் போல அவ்வழி

பாட்டில் தோன்றி அருள்புரிவான். யோகத்தில் நிற்போர், 'யோகியரது உள்ளங்களிலே அவர்கட்கு அவர் கருதும் வடிவில் காட்சியளிக்கின்ற அப்பெருமானே இங்கும் இவ்வடிவில் விளங்குகின்றான்' எனக்கொண்டு வழிபடுவர். அவர்கட்குச் சிவபிரான், பசுவின் மடியில் கறந்தால் வெளிப்படும் பால்போல அக்கருத்தின்வழி வெளிப்பட்டு நின்று அருள்புரிவன். ஞானிகள், 'எப்பொருளிலும் ஒழிவற நிறைந்து நிற்கும் இறைவன் தான் விளங்கி நின்று அருள்செய்தற்பொருட்டுக் கொண்ட இவ்விடங்களிலும் அவ்வாறு நிற்கின்றான்' என்று அவன் அருள்வழியால் வழிபடுவர். அவர்கட்குச் சிவபிரான், கன்றை நினைந்த பசுவின் மடியில் பால் தானே விம்மி ஒழுகுவதுபோலத் தானே இனிது வெளிப்பட்டு அருள்புரிவான். மேற்கூறிய வழிபாடு, தோற்றத்தில் ஒன்றுபோலக் காணப்படினும், கருத்திலும், பயனிலும் பெரிதும் வேறுபட்டு நிற்கும் என்பது உணர்க.

மாணுக்கன் : அங்ஙனமாயின், சைவ சித்தாந்தத்தில் முதற்றொட்டு இறுதிகாறும் எந்நிலையிலும், யாவர்க்கும் உய்திதரும் சாதனமாகச் சொல்லப்படுவன திருநீறு, உருத்திராக்கம், திருவைந்தெழுத்து என்பவற்றுடன், குரு லிங்க சங்கம வழிபாடே போலும்!

ஆசிரியர் : ஆம்! ஆம்! அவையே என்றும், யாவர்க்கும் இன்றியமையாச் சாதனங்களாம். ஆகவே, நீயும் அவைகளையே பற்றிநின்று பிறவித்துன்பத்தினின்றும் நீங்கி இறைவன் திருவடிப் பேரின்பத்தினைப்பெற்று வாழ்வாயாக.

மாணுச்கன் : வாழ்ந்தேன் அருட்கடலே! வற்றுப் பவக் கடலில் வீழ்ந்தே அலையாமல், கண்ணுதலும் கண்டக் கறையுங் கரந்தருளி மண்ணிடையின் வந்து என் மலமகற்றி என்னை ஆட்கொண்டு, எனது சிற்றறிவு காரணமாகத் தெளிவின்றி வினவிய வினாக்கட்கெல்லாம் சினங்கொள்ளாது அருள்மிக்குத் தெளிவான விடைகள் பலவற்றையும் அருளிச்செய்து என்னை வாழ்வித்த அடிகளது பேரருட்கு அடியேன் செய்யும் கைம்மாறும் உளதோ! அடியேனது உடல் பொருள் ஆவி அனைத்தும் முன்பே அடிகட்கு ஆக்கிவிட்டேன். இனியும் என்றும் அடியேன் உமது அடியுறை! அடியுறை! வணக்கம்!

**சித்தாந்த வினாவிடை முற்றிற்று.**

# ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள்

# காசியாத்திரை அனுபவங்கள்

## திரு. அ. கல்யாணசுந்தர தேசிகர்

"என்றுதான் சிவகாசி என்று ஒளிரும் முத்திநகர் எல்லைதனை வந்துபணிவேன், என்று கங்காநதியில் மூழ்கி விடுவேன், முத்தியீந்திடும் மணிகன்னிகை நன்று நன்றென்று படிவேன், என்று ஞானமிகு ஞானவாவியில் மூழ்குவேன், ஞானவானந்த பூரணமான நின்பாத நளினங்கள் என்றுபணிவேன், ஒன்று நின்னருளை யென்றோபெற்றிருப்பன் என்று உந்தியிடும் ஏழையேன் முன் உபயபரிபுரமசைய அவிமுத்தமென்றோதும் ஒரூரினுக்கு அழைக்கக் கன்றினைத்தேடி ஆன் ஓடி வருவதில் கருணையுடன் ஓடிவருவாய் காசியெனும் வாரணசி நகரானந்த காலவயிரவநாதனே" என்று ஏங்கி ஆதுரங்கொண்டது ஒரு ஞானத்திருவுள்ளம் "என்னமாதவம் முன்பியற்றினேன் எளியனேன், இமையவர்கள் பணியவர்தம் ஏர்கொண்ட அவிமுத்த நகரத்திலே யென்றும் இடையருது வாழவும் மன்னிகங்காநதியில் மூழ்கவும் ஒரு பெரிய மணிகன்னிகைத் தடத்தினில் வந்து படியவும் வேதமோது சிற்சிவ ஞானவாவி உதகம்பருகவும் உன்னழகுபொழிகின்ற திருமேனி காணவும் உயிரினுக்குயிராகியே உல்லாசபரமசுகசானந்த வடிவான உபயசரணம் பணியவும் கின்னரர் எனும் புலவர் முதலியோர்கள் பாடுமிசை கேட்டருளு மிருசெவியனே கெங்காதரா கௌரிபங்காள காசிவரு கேதாரநாதகுருவே" என்றும் அனுபவம் பேசுகிறது. அது அக்காசியிலே இருந்து ஞானக்கல்வியும் அனுபவ சித்தியும் பெற்றது. அந்த அனுபவத்தைத் தருமைக் குருபீடத்தமர்ந்தும் மறவாது மீண்டும் சென்று கண்டுவந்தது. இது அன்று நடந்தது............... அதாவது தருமையில் பத்தாவதுபட்டத்தமர்ந்து பல அற்புதங்களை நிகழ்த்தி சைவச் செந்நெறி வளர்த்த அருட்குரவர் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக பரமாசாரிய சுவாமிகள் காலத்தில்..

இதற்குப்பிறகு இப்போது அப்பீடத்தில் 25 ஆவது குருமகாசந்நிதானமாக வீற்றிருந்தருளும் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் அருளாட்சிக்காலத்தும் அச்சிவகாசி யாத்திரை பன்முறையும் நிகழ்வதாயிற்று. சென்று சென்று அனுபவம் முதிர முதிர அது காசியாத்திரை, திருக்கேதார்யாத்திரை, பதரியாத்திரை, பசுபதிநாதயாத்திரை, அமரநாதயாத்திரை, மகாகயிலாய யாத்திரை, பன்னிரு ஜோதிர்லிங்கயாத்திரை, தென்னாட்டிலுள்ள பாடல்பெற்ற தலயாத்திரை, மலையாள நாட்டிலுள்ள, வடநாட்டிலுள்ள பல்வேறு புனித தல, தீர்த்த யாத்திரை என்று பெருகி வளர்ந்து அத்திருவடிபடாத ஆலயமில்லை, அத்திருமேனிபடியாத தீர்த்தமுமில்லை, கண்டு உறவாடாத உயர்ஞான முனிபுங்கவருமில்லை, பாரதத்தில் காணாத பகுதிகளுமில்லை என்பதாயிற்று. வரலாற்றில் ஒரு சிறப்பிடம் பெற்றது.

'சிவபோகமென்னும் பேரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய் ஏக உருவாய்க் கிடக்குதையோ! சேரவாரும் செகத்தீரே!' என்று ஒரு பெரியார் அழைத்தார். அதேபோல தாம் பெறும் இந்த இன்ப அனுபவங்களைத் தம்மைச் சார்ந்தாரும், சீடர்களும், அன்பர்களும், பணியாளர்களும் பெறுதல் வேண்டும் அந்தப் பெருவெள்ளத்தில் ஒரு துளி, ஒரு திவலையேனும் இவர்கள் மீதும் பட்டுவிடுதல் வேணும்; அவர்களும் உய்யவேணும் என்னும் பெருங்கருணையால் யாத்திரைகள்தோறும் பல்லோரையும் உடனழைத்துச்சென்று அந்த இன்ப அனுபவத்தை அறியாதாரும் அறிந்து அனுபவிக்கச் செய்து கல்லையும் கனிவித்து அருட் பிரசாதத்துக்கு ஆளாக்கிவருகிறது இந்த நல்லதொரு அருளுள்ளம். இது பலமுறையும் நிகழ்ந்துள்ளது.

இப்போதும் அண்மையில் நிகழ்ந்தது. 19—6—70ல் யாத்திரை தொடங்கி 4—7—70ல் முடிவுறும் வண்ணம் திட்டம் ஒன்று தீட்டியது. நடைபெறுத்தியது. காசி, பிரயாகை என்னும் இரண்டு முக்கிய க்ஷேத்திர தீர்த்த யாத்திரையே இந்தமுறை கொண்ட குறிக்கோள். நடுவில் உடன்வந்தோர் கண்ட பயன் பல. பெற்று மகிழ்ந்த அனுபவ உபதேச அருள்மொழிகள் பல. எளிதில் யாரும் உணரும்

வகையால் அனுபவப்பொருளை விளக்கி இந்த யாத்திரையின் உயர்வை, செய் முறையை, இதன் விளைவாகக் கிடைக்கும் இகபர லாபங்களை. நாட்டனுபவங்களை, மக்கள் கலப்பால் விளையும் நன்மைகளை உணரச்செய்திருக்கிறது.

ஸ்ரீ காசியில் குறைந்தது ஒரு கர்ப்பவாசம் அதாவது 10 மாதங்கள் அல்லது 10 நாட்களாவது தங்கி கங்கையில் மூழ்கி, கேதாரேசன், காசி விசுவேசன், அன்னபூரணி, விசாலாட்சி, தண்டபாணியெனும் காலபைரவர் தரிசனம் செய்தல் வேண்டும் என்பது முறை. கங்கையில் 64 (துறைகள்) கட்டங்கள் உள்ளன. அவ்வவற்றிலும் முறைப்படி முழுகுதல் வேண்டும். இல்லாவிட்டால் 64 கட்ட தரிசனமும் 5 கட்ட்ங்களில் முழுகுதலுமாவது செய்தல் வேண்டும்.

பிரயாகையில் முண்டம், காசியில் தண்டம், கயையில் பிண்டம் என்பர் அறிவின் மேலோர். இந்த மூன்றும் இல்லறத்திலிருப்பவர்க்கு விதிக்கப்பெற்றது. ஆனால்பிரயாகையில் திரிவேணி (கங்கை, யமுனை சரஸ்வதி மூன்று நதிகளும் கூடுதுறை) யில் வழிபாடு செய்து மூழ்குதல், அங்கே சுத்த கங்கை எடுத்தல், ஸ்ரீ காசியில் கங்கையில் மூழ்கி அத்தலத்திலுள்ள பல்வேறு ஆலயங்களிலும் சென்று தரிசித்தல் இவை துறவறத்திலுள்ளோரும் இல்லறத்திலுள்ளோரும் செய்யத்தகுவது. இந்த பாரதப்புனித நன்னாட்டிலுள்ள அனைத்து ஆலயங்களும் வாரணாசியில் அடங்கும் என்பர். காசி நகரமே ஒரு பெரிய சிவாலயம்; சிவபூமி; சிவனெளி காலநிற்பது; அது ஒரு பேரொளி என்ற நிலையில் காசி என்ற பெயர் பெறுவது. அதிலும் ஞானபரமாக அந்தம் ஆதி என்பதன் விளக்கமானது. உயிருக்கு உய்வளித்து ஓய்வளித்து தன்னுள்ளே ஒடுக்கி, பேருழியில் நிகழும் அந்த மகாதாண்டவத்தில் தானே தனித்து நின்று யாழ்மீட்டி கூத்துமாடி விரிவுகாணவேண்டிய காலத்தில் எல்லாவற்றையும் படைத்தளித்து விரிவுசெய்து உலககாரணனாகவும் உறைகின்றான் நம்பரமன் இங்கே. அதற்கேற்ப பஞ்சாட்சர மந்திரத்தில் உயிர்க்குறியாக நிற்கும் யகார அமைப்பில் நகரமே அமைந்துள்ளது என்கிறது பெருநூல், இது சிவவிராட்புருடனின் புருவமத்தியாக விளங்குவது. இறைவன், இளம் பிறையணிந்துள்ளான்; அதன்மீது கங்கையையும் தரித்துள்ளான்

என்பதற்கிணங்க இங்கே காசிநகரத்துக்குப் பிறை சூடியதை ஒப்ப கங்கை வளைந்து கிழக்கிலிருந்து தெற்காகி வடக்கு நோக்கி வளைந்து பிறகு கிழக்குநோக்கி ஓட்டமுடையதாகப் பாய்ந்து செல்லுகின்றது.

காசி முத்தித்தலங்களுள் சிறந்து, அவிமுத்தமெனப்படுவது. மரணந்த காலத்தில் இங்கு அம்பிகை நம் துன்பம் போக்க எளிவந்து நம்மைத் தம்மடித்தலத்திருத்தி கருணையோடு தம் முந்தானையால் வீசி அயர்வுபோக்க விசுவேசன் ஓடிவந்து நம் அறிவுமறக்கும் பொழுதினிலே உயிர்த்தாரகமாகிய சூக்கும பஞ்சாட்சரத்தை நம் வலது காதினிலே ஓதி நம்மை ஆட்கொள்ளும் பெருந்தலமென்பர் அனுபவ ஞானிகள். இதனை:

"கூற்றின் இடர் மாற்றவே அவிமுத்தம் என்றோது கோநகரம்வந்தடைந்தேன் கூட்டை உயிர்விடும்காலம் நாட்டு மணிகன்னிகைக் குலவுதீரம் சேரவும், ஏற்றின்புறத்து உன்னிடைப்புறம் பிரியாத இமயாசலம் பயந்த என் அன்னை முன்னுதவு பிள்ளைவிளையாடவும் இளையவனை மடியில்வைத்தே ஊற்றெடுக்கும் கருணை முலையமுதம் ஒருகைக்கொண்டூட்டி எனை ஒருபிள்ளையாய் ஒருகரத்தில் தடவி அருள் நயனம் வைத்தெடுத்து உத்தரியம் வீசு தென்றற்காற்றினல் என்களையை மாற்றிடவும் நான் கண்டு கண்குளிரவைப்பாய்" என்றும்,

"மெய்யென்று பெயர்பெற்ற பொய்யான
என்னுடலம் விடுகாலம் நானறியவும்,"

"மரணகாலந்தனின் மணிகன்னிகைத்
துறையில் வந்து சேரச்செய்து நீ
மால் வெள்ளை விடையின் மேல் வேலன்
உமையவளோடு வந்தென் வலது
செவியிலே பரமவுபதேசம் வைத்
தாவி பரமானந்த பரம சலதியில்
மூழ்கிடப் பாழான காயம் மெய்ப்பாகீரதிப்
புனல் படிந்திட வரம் தந்தருள்
சரணங்கடந்த முழுமுதலே சிதாகாச
கனகசபை நடராஜனே காசி
விசுவேசனும் தேஜோ சொரூபமே
கருணுநிதித் தெய்வமே"

என்றும் அருளிச் செய்திருக்கிறார்கள் பத்தாவது குருமகா சந்நிதானமவர்கள். மேலும் மரணந்தகாலத்தில் தான் இத் தல தரிசனம் தீர்த்தமாடுதல் பயனளிக்குமா ? உலகியல் வாழ் வுக்குப் பயனளிக்காதா என்று பல உள்ளங்கள் ஏங்குவதும் இயற்கைதானே. அதற்கும் விடை இருக்கிறது அவர்கள் திருவாய்மொழி வழியில் '' நற்றவப் பயனும், இகபரமும் கொடுத்திடும் பெரு வள்ளலும் குறைவற்ற செல்வமும், நிறை வுற்ற மெஞ்ஞானகுருவும் என்குல தெய்வமும் மற்றுள்ள சித் தியும் சுற்றமும் நீ யென்று வந்தடைந்தேனை அருளான் மலர்க்கரங் கொண்டு பரமானந்த அமுதூட்டி மதலை யெனவே வளர்ப்பாய் '' என இம்மை வாழ்விலும் மறுமைவாழ்விலும் நமக்கு வாழ்வளிக்கும் இந்த அருளனுபவம் என்பதையும் உறுதிகூறுகிறது.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தில் எத்தனையோ முறை இவ்யாத்திரை சென்றிருந்தாலும் இம்முறை ஒரு தனிச் சிறப்புடையது என்பர் அன்பர்கள். இருபத்தைந்தா வது பரமாசாரியராக விளங்கும் நமது ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானத்தின் அருளாட்சியில் இருபத் தைந்தாவது ஆண்டு நிறைவுற்ற அந்த நேரத்தில் நிகழ்ந்ததாதலின் இதற்கு உயர்வென்பர். அதற்கேற்ப நம் தருமைத் திருமடம் திருவருளால் செழித்து வளரவேண்டும் இப்போது அதனை ஏற்று ஒப்பற்ற நிலையில் அருளாட்சிபுரியும் கயிலைக்குரு மகாசந்நிதானம் அத்திருவருளும் குருவருளும் கூட்டுவிக்கச் சிறந்து வாழவேண்டுமென்றும் கனவிலும் நனவிலும் பெருமான் திருவடி இறைஞ்சி வேண்டிநிற்கும் அன்பர்கள் பலரில் சிதம்பரம் செல்வர் டாக்டர் திரு. K. அரங்கசாமிப் பிள்ளை அவர்களும், சென்னை டாக்டர் திரு. M. நடராஜன் அவர்களும், புலவர், திரு. வடிவேற்பிள்ளையும், திருமுறை வாணர்களும், சிவாசாரியர்களும், வேதவிற்பனரும் ஆதீனத் தொண்டர்களும் பணியாளர்களுமாக 34 பேர்கள் உடன் சென்றனர். குளிர்பதனப் பெட்டி (Air conditoned) ஒன்று ஏற்பாடாகி இருந்தது காசியில் 10 நாட்களுக்கு மேல் தங்கி கங்காஸ்நானம், கேதாரேசர் விசுவேசர் அன்ன பூரணி தண்டபாணி தரிசனம், அறுபத்து நாலு கட்டத்தில் முழுக்கு முதலியனவும் முறையாக நடைபெற்றன. கங்கை

யில் 64 கட்டத் தரிசனம், முழுக்கு இவற்றுக்குப் படகில் சென்ற காலங்களிலும், ரயிலில் செல்லும்போதும், காலை மாலை நேரங்களிலும், தரிசன காலங்களிலும் திருமுறைப் பாராயணம் செய்விக்கப்பட்டது. காசி விசுவேசர், அன்ன பூரணி, கேதாரேசுவரர் மூர்த்தங்களுக்கு நிறைய பாலபிஷேகமும் ருத்ரகலசாபிஷேகமும், வேத ஆகம திருமுறைப் பாராயணங்களுடன் செய்விக்கப்பட்டன. வழக்கம்போல் "பாலுக்குப் பாலகன் வேண்டியழுதிடப் பாற்கடல் ஈந்தபிரானாகிய விசுவேசனையும் ஞானசம்பந்தருக்கு ஞானபோனகம் நல்கிய நம் பிராட்டி அன்னபூரணியையும், கேதாரேசனையும் பாற்கடலில் குளிக்கச் செய்தது நமது கயிலைக் குருமணிகளின் கனிவுள்ளம். பின்னும் அங்குக் காசியில் வதியும்பல அருளாள அடியவர்க்கு அன்னம்பாலிப்பு நடத்தியும் மகிழ்ந்தது. காசியில் முறையாகத்தரிசிக்கவேண்டிய பல ஆலயங்களையும்தரிசித்தது; உடன்வந்தோரையும் அழைத்துச்சென்று இன்னருள் வழங்கியருளியது ; உடன்வந்தோர் சிலர் சாரநாத், கயா முதலிய இடங்களுக்கும் சென்றுவந்தனர்.

இதில் தனிச்சிறப்பு : காசியில் உள்ள குமாரசுவாமிமடம், தருமைக் குருமணி எழுந்தருளும்போதெல்லாம் பழையன கழித்து புதியன புகுத்தப்பெற்று நாளும் வளர்ச்சிகண்டு வருவதை உணர்த்திநிற்கும். அதேபோல இப்போது அம் மடத்தின் ஒரு பகுதியை இடித்தெடுத்துப் புதிவதாக எல்லா வசதிகளுடனும் அறைகள் கட்டி நிறைவுற்றிருந்தது. முதன் முதல் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தை அப்புதுக் கட்டிடத்தில் எழுந்தருளுவித்து கொலுவில் அமர்த்தி வழிபாடுகள் செய்யப்பெற்றன. அதிலும் காசி குமாரசுவாமிமடத்தில் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித்தம்பிரான் சுவாமிகளவர்களுக்கு மிகவும் பிடித்தமான பாடலான "சிறையாரும் மடக்கிளியே" எனும் பாடலை நமது ஆதீனம் நாதசுரவித்துவான் திருவிடைமருதூர் வீருசாமி பிள்ளை வாசித்தது அந்தச்சமயம் ஒலி பரப்பாகியது.

முன்னம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளின் அறுபதாவது ஆண்டு நிறைவு விழாவை முன்னிட்டு நடந்த வழிபாட்டில் கங்கையில் 64 கட்ட தரிசனகாலத்தில் படகில் செல்லும்போது ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளவர்கள் வீருசாமிப்பிள்ளையை நாதசுரத்தில் திருமுறைகளையும் இசைத்து வாசித்தல் வேண்டும் ;

முதலிலே "சிறையாரும் மடக்கிளியே" வாசிக்கட்டும்; அதிலும் இன்ன பண்ணிலே இன்ன இராகத்திலே என்று ஆணையிட்டு அன்று வாசித்த அதே பாடல் அதே வித்துவான் வானொலியில் இசைத்திருந்தார். அது ஒலிப்பதிவாகி அப்பொழுது அங்கு ஒலிப்பரப்பாகியது. இது ஒரு இயைபுதான்.

காசியில் குமாரசுவாமி மடம் தென்னாட்டவர் எவர் வந்தாலும் காசியில் தாயகமாய் இருந்து உபசரித்து வருகிறது. அதிலும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானமே எழுந்தருளியதும் உடன்வந்த நல்லவர்களைக் கண்டதும் அங்கு உபசரிப்பு மிக உயர்ந்தமுறையில் நடைபெற்றது. டாக்டர் திரு. K. அரங்கசாமிப் பிள்ளை அவர்கள் "எனக்குத் திருமணமான புதிதில் மறுமகனாக என் மாமனார்வீட்டில் நடைபெற்ற அன்பான உபசரிப்பையும் விஞ்சியிருக்கிறது இங்கு உபசரிப்பு. இதற்கேற்ப இங்குறும் பணியாளர்களும், நிர்வாகி கல்யாண சுந்தரம் பிள்ளையும் உள்ளார்கள். கடிகாரம் தவறினாலும் காலம் தவறாத உபசரிப்பு நடைபெறுகிறது. இத்தனையும் இங்கு முறையாக நடைபெற நிர்வகிக்கும் முனிபுங்கவர் எங்கோ தொலைவில் தமிழ் நாட்டில் பனசையில் இருக்கின்றார்கள். இச்செம்மையான சீரிய நிர்வாகத்தின் சிறப்பு அங்குள்ளது. எஜமானன் நேரே உள்ள இடத்தில் நடப்பதைவிட அவர்களைக்காணா இடத்தில் செம்மையாக இயங்குவதே சீர்மையான நிர்வாகம் என்பதை இங்குக் கண்டோம். இது நமக்குமட்டுமென்றில்லாது இப்போது இங்கே வந்துற்ற ஏனைய பிற அன்பர்களுக்கும் ஒரே பெற்றியாக இருக்கிறதே" என்று வியந்துரைத்தார்கள். செம்மைசேர் திருப்பணிகளும், கட்டிடப்பணிகளும், அறப்பணிகளும், ஆலயப்பணிகளும், பிற பணிகளும் நடந்துகொண்டே இருப்பதையும், இந்த ஆட்சியில் வருவாயும் காசியில் நாளும் பெருகி வருவதையும் கண்டும் கேட்டும் பாராட்டினார்கள்.

இனி தொடக்கத்திலும், பயணவழியிலும், இடைநாட்களிலும் நிகழ்ந்த சிறப்புக்களையும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தின் உடனிருந்தகாலத்திலெல்லாம் வழங்கிய அருளுரைகள், அனுபவ உரைகள் பற்றிய விளக்கங்களையும் வரும் இதழ்களில் காணலாம்.

RANGASWAMY M. B., B. S. PHONE No. 307
D. T. M. & H (LIVER)., Z. M. R. (VIENNA). CHIDAMBARAM
MAYURA CLINIC Date: 6—7—1970.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்களின் பொற்பாத கமலங்கட்கு வணக்கங்கள் பல.

அடியேன் பல ஆண்டுகளாகத் தங்களைத் தரிசித்தும் திருவடிகளைத் தொழுதும் இகபர சுகங்களைப் பெற்றுவருகிறேன். தாங்கள் ஞானபீடமேறி அருட்செங்கோல் செலுத்திய 25 ஆண்டுகளில் எண்ணரிய எண்ணியாங்கு எத்தனையோ அருட்செயல்களைச் சிறப்புறப் பலரும் போற்றும் வண்ணம் ஆற்றியிருக்கிறீர்கள்.

தங்கள் பரம கருணையினால் அடியேனுக்கும் சத்சங்கத்துடன் குருமகாசந்நிதானத்தின் துணைகொண்டு காசி க்ஷேத்திரத்திற்குச்சென்று கங்கையில் நீராடும்வாய்ப்புக் கிடைத்தது தங்களுடன் இருந்து கங்கையில்நீராடி ஐம்புலன்களையும் இறைவழிபாட்டிலே செலுத்தி, தங்களை நாள்தோறும்தரிசித்துத் திருவடிகளைத்தொழுது அருள் பெற்ற நாட்கள் என்வாழ்க்கையில் மறக்கமுடியாத பொன்னான நாட்களாகஎண்ணி மகிழ்கின்றேன். இது பண்டைத்தவத்தின் பயனாலும், குருவருளாலும் கிடைத்தது.

"யாமோதிய கல்வியும் எம் அறிவும் தாமே பெற வேலவர் தந்ததால்" என்ற அருணகிரிநாதப் பெருமான் வாக்கிற் கிணங்க, கடல்மடை திறந்தாற்போல் சாஸ்திர தோத்திரங்களைப்பற்றி நிகழ்த்திய அருள்வாக்கு, தங்களது ஞானத்தின் மேதா விலாசத்தைத் தெளிவாக்கியது. தாங்கள் பொன்னையும் பட்டையும், பொருளையும் வாரி வழங்கியது கர்ணனின் கொடையிலும் சிறந்ததாக விளங்கியது. 'யான் எனது அற்ற' நிலையில் நின்று தாங்கள் உறவாடியது தங்கள் உள்ளம் என்னும் பெரும் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனை உணரவைத்தது. தாங்கள் நடத்திய செம்மையான வழிபாட்டு முறைகள் அடியார்களுடைய உள்ளங்களை நெகிழ வைத்தது. இத்தகைய ஞானமேதிருவுருவாக விளக்குகின்ற சந்நிதானத்தின் திருவடிகள் தோய்ந்ததால் பல்லாற்றானும் பெருமை

யுள்ள கங்கை மேலும் புனிதம் அடைந்தது என்ருல் அது மிகையாகாது.

தாங்கள் காட்டிய பேரன்பும் வான் கருணையும் என்றென் றும் மறக்க முடியாததால் அதற்கு ஈடு இணையாக நாங்கள் நன்றி செலுத்த முடியாது என்பதை உணர்ந்தும் ஏதாவது வார்த்தைகள் அளவிலாவது காட்டவேண்டும் என்ற நன்றி யுணர்ச்சி பொங்க இதை எழுதுகிறேன்.

எல்லாம் வல்ல எம்பெருமானுடைய திருவருளால் தாங்கள் இன்னும் பலகாலம் ஆட்சி செலுத்தி என்போன்ற வர்களையும் உய்விக்கவேண்டும் என்று மனமொழி மெய்களால் இறைவனை வணங்குகிறேன்.

என்றும் தங்கள் அன்புமறவாத,

K. Rangaswamy.

உ

SARAVANA BHAVANAM

1-A, LANDONS ROAD
MADRAS-10.
Phone: 61969

திருப்பெருந்திரு திருக்கயிலாய பரம்பரைத் தருமை யாதீனத்துத் தவமுனி கயிலைகண்ட குருமணி அவர்களின் பொற்பாதகமலங்களை நீரிட்டு, மலர்தூவி மனமொழிமெய் கரணங்களால் வணங்கிப் போற்றுகிறேன்.

மகாசந்நிதானம் அவர்களின் திருவுளப்பாங்கின் வண் ணம் காசியாத்திரை உவப்பிலா ஆனந்தமாகப் பரிபூரணம் அடைந்தது. "கண்டறியாதன கண்டேன்" என்பதற்குச் சான்ருகக் கண்டும் கேட்டுமிராத வண்ணம் கங்கைநீராடலும், சிவபூசனையும் சிவசிந்தனையும் அபிடேக ஆராதனைகளும் முறையோடு, பொலிவோடு, கண்டு, கேட்டு அனுபவித்தவர் களுள் அடியேனும் ஒருவன்.

"யோக: கர்மஸு கௌசலம்" —கீதை.

செய்வதைச் செம்மையாக செய்வது யோகம். இதற்கு இலக்கணமாகத் திகழும் மகாசந்நிதானமவர்கள் செய்த அபிடேக ஆராதனைகள் இன்றும், என்றும் எனதகத்தே ஒளி விட்டுக்கொண்டிருக்கும்.

"ஊட்டுவிப்பானும் உறங்குவிப்பானுமாகி" 'தாயாகி தந்தையாகி' 'எங்கள் உள்ளம் கவர் கள்வனாய்' தூய அன்பு சொரிந்து நிகரிலாது ஓங்கி உயர்ந்தபண்பினாலும் அரவணைத்துப் பரிவு காட்டியது பெறற்கரிய இன்பம். உள்ளம் நெகிழ்கிறது. கிடைத்தற்கரிய பெறும் பேறு.

குருமணி அவர்களின் திருவடிநீழலில் சில தினங்களே தங்கி, இளைப்பாறி அன்புக்கனி சுவைத்து, உள்ளொளி பெருக்கி சிந்தை தெளிந்து, சிவனடியார் நடுவிருந்து, புனித நீராடி. 'கூடல் இலங்கு குருமணியைப் போற்றி வணங்கி, வந்தனை செய்த நிகழ்ச்சிகள், அடியேன் சிந்தனையுள் தேனாக ஊறி, ஊனில் கலந்து, உள்ளொளி பெருக்கி, நீங்கா நினைவாக, அற்புத அனுபவமாக அமைந்தது.

அடியேனையும் ஒரு பொருட்டாகக்கருதி உடன் அழைத்துச் சென்று, செம்மையாய் சிந்தை தெளிவித்தது தங்களின் அளப்பரிய தனிப்பெருங்கருணை. அதற்குப் பாத்திரமாகியது அடியேனுடைய பெரும்பாக்கியம். இந்தப் பேரின்பமும், தங்களின் திருவடிநீழலும் என்றும் எனக்குக் 'கிடைக்க குருமணி அவர்களின் பரிபூரண ஆசியும், அருளும்கிட்ட 'கருநட்ட கண்டனை அண்டத்தலைவனை, தில்லைச் சிற்றம்பலத்துப் பெருநட்டமாடிய நாயகனை மறைமுதல்வனை' வணங்கி, வாழ்த்தி அருளும்படி விழைகிறேன்.

தாங்கள் காட்டும் பெருங்கருணைக்கு அடியேனுடைய நன்றிச்சொல் ஈடாகாது. நன்றி மறப்பது நன்றன்று என்பதற்காக அடியேனுடைய உளமார்ந்த நன்றியைத் தெரிவிக்க விழைகிறேன்.

தாங்கள் நித்தம் நித்தம் வழிபடும் செந்தமிழ்ச் சொக்கனும், செந்தில்பதிவாழ் செல்வக்குமாரனும் சந்நிதானங்களுக்குப் பலப்பல ஆண்டுகள் சிவப்பணியை நடத்திக் கொண்டு அறமும் தமிழும் சைவமும் எங்கும் நீக்கமற நிறைந்து பரவத் தொண்டு செய்யப் பணிக்க வேண்டுமென சிரம் தாழ்த்தி வணங்கி வேண்டுகிறேன்.

தங்கள் அடியவன்,
மா. நடராஜன்.

# திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடு

( மலர் 29, இதழ் 7. பக்கம் 392 இன் தொடர்ச்சி )

22—5—70 வெள்ளிக்கிழமை உரையரங்கம் நிகழ்ந்தது. தருமையாதீன முதற்குரவர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருளிய சிவபோகசாரப்பாடல்களில் 'ஆசையறுப்' என்ற பாடல் உரையரங்கத்தின் பொருளாய் அமைந்தது. தமிழக அரசின் சட்டம், நீதித்துறை அமைச்சர் மாண்புமிகு, திரு. மாதவன் B Sc., B L.. அவர்கள் உரையரங்கத்தைத் தொடங்கிவைத்தார்கள். அமைச்சர் அவர்கள் ஸ்ரீ குருஞானசம்பந்தர் வரலாற்று நிகழ்ச்சிகளையும், அவர் இயற்றிய பாடற் பொருள்களையும்கூறி அனைவரையும் மகிழ்வித்தார்கள். அடுத்து, திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் (குன்றக்குடி அடிகளார் M. L. C.) அன்றைய உரையரங்கத்திற்குத் தலைமையேற்று ஆற்றிய தலைமையுரையில் பரபரக்கவேண்டாம. கண்ணுக்கினிய பொருளாகி, பேரன்பனல்லன் என்ற தொடக்கமுடைய பாடற் பொருள்களை விளக்கி, ஆசையறுப் என்ற பாடல் இன்றைய ஆராய்ச்சிக்குரியது. அப்பாடலைப் பல தலைப்புக்களாகப் பிரித்து உரை விளக்கங்காண இருப்பது போற்றற்குரியது என்பனபோன்ற பல கருத்துக்களைக் கூறியருளினார்கள். அடுத்து காஞ்சிபுரம். தொண்டைமண்டல ஆதீனம் மகாசந்நிதானம ஸ்ரீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் சிவபூசையின் இன்றியமையாமையையும், அதன் பயனையும் ஸ்ரீ குருஞானசம்பந்தர் வழி நின்று சாத்திர மேற்கோள்களுடன் விளக்கிச் சிறப்புரையாற்றினார்கள்.

பின்னர். திருவாவடுதுறை ஆதீன வித்துவான், தருமையாதீனப்புலவர், சித்தாந்தக் கலைச்செல்வர் திரு க. வச்சிரவேல் முதலியார் B, A., L. T., அவர்கள் "ஆசையறுப் பாசம்விடாய்" என்ற தலைப்புக்களிலும் தருமையாதீனப் பல்கலைக் கல்லூப் பேராசிரியர், தருமையாதீனப்புலவர், மகாவித்துவான், சித்தாந்தக் கலைமணி, திரு சி. அருணைவடிவேல் முதலியார் அவர்கள் "ஐந்தெழுத்தை நீ நினையாய்" என்ற தலைப்பிலும், தேவகோட்டை, தருமையாதீனப்புலவர், பாலகவி, வயிநாகரம் திரு வே. இராமநாதஞ் செட்டியார் அவர்கள் "சினமே தவிராய்" என்ற

தலைப்பிலும், சென்னை, "திருக்கோயில் ஆசிரியர், சைவ சித்தாந்தப் புலவர்மணி, திரு. N R. முருகவேள் M. A., அவர்கள் "திருமுறைகள் ஓதாய்" என்ற தலைப்பிலும் சாத்திர தோத்திர மேற்கோள்களுடன் ஆய்வுரை நிகழ்த்தினார்கள்.

23—5—70 சனிக்கிழமை மாலை இதிகாசங்களில் சகோதர பாசம் விஞ்சிநிற்பது கம்பராமாயணமா? வில்லிபாரதமா? என்ற தலைப்பில் பட்டிமன்றம் நிகழ்ந்தது. அன்று காரைக்குடி திரு சா. கணேசன் அவர்கள் நடுவராக இருந்து கம்பராமாயணம். வில்லிபாரதம் இரு நூல்களின் சிறப்பையும் பட்டிமன்ற நடைமுறைகளையும் கூறிபட்டிமன்றத்தைத் தொடங்கி வைத்தார்கள். சகோதரபாசம்விஞ்சிநிற்பது கம்பராமாயணத்திலேயே என்ற கட்சியில், திருச்சி தேசியக் கல்லூரி விரிவுரையாளர் திரு. சோ. சத்திய சீலன் M. A., B. T., அவர்களும் பாண்டிச்சேரி தமிழாசிரியர், வித்துவான். திரு. அ. அருணகிரி அவர்களும் தருமையாதீனப் பல்கலைக்கல்லூரிப் பேராசிரியை வித்துவான். திருமதி. ப நீலா அவர்களும் கம்பராமாயணத்திலிருந்து பல மேற்கோள்களைக் காட்டி வாதிட்டனர். வில்லிபாரதத்திலேயே சகோதர பாசம் விஞ்சி நிற்பது என்ற கட்சியில், இராசிபுரம், தமிழாசிரிய புலவர், திரு மு. இராமசாமி அவர்களும், சேலம்வேலூர். கண்டர் கல்லூரி. புலவர் திரு. என். கே. இராமராசன் அவர்களும், மாயூரம், வித்துவான், திருமதி. பத்மா அவர்களும், வில்லி பாரதத்திலிருந்து பல மேற்கோள்கள் காட்டி வாதிட்டனர். இருகட்சிகளின் தலைவர்களும் தம் தம் கட்சிகளின் கருத்துக்களைத் தொகுத்துக் கூறி எதிர்க்கட்சியின் கருத்தை மறுத்துக் கூறினர். பின்னர், நடுவர் அவர்கள் இருகட்சிகளின் வாதத்தோடு தம் கருத்தையும் கூறி கம்பராமாயணமே சகோதர பாசத்தில் விஞ்சி நிற்பது என்று முடிவு கூறினார்கள்.

24-5-70 ஞாயிற்றுக்கிழமையன்று பிற்பகல் 6 மணி அளவில், எட்டாம் திருநாளான;அன்று திருநெறிய தெய்வத் தமிழ்மாநாடு தமிழக அரசு சட்டப்பேரவைத் தலைவர் மாண்புமிகு திரு. புலவர் கா. கோவிந்தன் எம். ஏ., அவர்கள் தலைமையில் துவங்கிற்று. அன்றையதினம் திருவாசகமணி திரு. கே எம். பால சுப்பிரமணியம் பி. ஏ., பி. எல்., அவர்கள் 'குருஞானசம்பந்தர் வாழ்வில்:அரசு நிலை' என்பதுபற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தருமையாதீனப்.புலவர் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் 'குருஞானசம்பந்தர் வாழ்வில் சமய நிலை' என்பதுபற்றியும், பாலூர் திரு. து. கண்ணப்ப முதலியார் எம். ஏ., பி. ஓ. எல். அவர்கள் 'குருஞானசம்பந்தர் வாழ்வில் மக்கள் நிலை' என்பதுபற்றியும், சென்னை திரு. ஔவை

து. நடராசன் எம். ஏ., அவர்கள் 'குருஞானசம்பந்தர் வாழ்வின் மொழிநிலை' என்பதுபற்றியும் சொற்பொழிவாற்றினார்கள்.

25—5—70 திங்கட்கிழமை ஒன்பதாம் திருநாளன்று மாலை கருத்தரங்கம் நடைபெற்றது. தஞ்சை அறநிலையத்துறைத் துணை ஆணையர் திரு டி. என். சிங்காரவேல் B.A.,B.L., அவர்கள் கருத்தரங்கைத் தொடங்கிவைத்தார்கள். அடுத்து சென்னை, கலைமகள் ஆசிரியர், செந்தமிழ்ச்செல்வர் திரு. வா. ஜகந் நாதன் எம். ஏ, அவர்கள் 'திருக்கோயில்களில் பண்பாடு' என்பது பற்றியும், அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பேராசிரியர், திரு. ச. அகத்தியலிங்கம் எம். ஏ., பி. எச். டி. அவர்கள் 'திருக்கோயில்களில் வரலாறு' என்பது பற்றியும், தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர் திரு. இரா. நாகசாமி எம். ஏ, அவர்கள் 'திருக்கோயில்களில் நுண்கலைகள்' என் பதுபற்றியும் ஆய்வுரை நிகழ்த்தினார்கள்.

பத்தாம் திருநாளான 26—5—70 செவ்வாய்க்கிழமை அன்று காலையில் சித்தாந்தப் பாடவகுப்பு நிறைவு திருக் குறள்வேள் திரு. ஜி. வரதராஜப்பிள்ளை பி. ஏ. அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தருமையாதீனப் பல்கலைக்கல்லூரிப் பேராசிரியர் தருமையாதீனப்புலவர், சித்தாந்தக் கலைமணி மகாவித்துவான் திரு சி. அருணைவடிவேல் முதலியாரவர்கள் சித்தாந்தப் பாடவகுப்பில் 'திருவருட் பயன்' என்ற நூலை நிறைவுசெய்தார்கள். மேலும் நாகப்பட்டினம் தேசிய உயர் பள்ளித் தமிழாசிரியர், தருமையாதீனப் புலவர் வித்துவான் திரு. வை மு சண்முக தேசிகர் அவர்கள் 'ஞானப்ரகாசமாலை' என்னும் தலைப்பிலும், பொள்ளாச்சி, வித்துவான் திரு. கோ. முருகையன் அவர்கள் 'சொக்கநாத வெண்பா' என்னும் தலைப் பிலும், தருமையாதீனப் பல்கலைக்கல்லூரிப் பேராசிரியர், வித்து வான், சிரோமணி. திரு. வி. சபேசனார் அவர்கள் 'நவரத்ந மாலை' என்னும் தலைப்பிலும் சொற்பெருக்காற்றினார்கள்.

பட்டணப் பிரவேசத் திருநாளான புதன்கிழமை 27—5—70 அன்று காலையில் 'அருள்நூல்கள்' என்ற தலைப்பின்கீழ், சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி மாண்புமிகு திரு. ஆர் சதா சிவம் பி. ஏ., எம். எல்., அவர்கள் தலைமை ஏற்றுப் பேசினார்கள். மேலும் திருவாரூர் வித்துவான் திரு. மு இரத்தின தேசிகர் அவர்கள் 'சோடசகலாப்பிரசாத ஷட்கம்' என்ற தலைப்பிலும், திருச்சி வித்துவான் தி பட்டுசாமி ஓதுவார் அவர்கள் 'சிவஞான தேசிகர் அருளிய அருட்பா' என்றதலைப்பிலும் சொற்பெருக்காற் றினார்கள். இரவு மதுரை, ரஞ்சிதகான, திரு. சோமசுந்தரம் குழு வினரின் இன்னிசை தக்க பக்கவாத்தியங்களுடன் நடைபெற்றது.



# செய்திகள்



தருமையில் :

## கும்பாபிஷேகம்

தருமபுரம் மேலவீதியில், தருமையாதீனம் இரண்டாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவச தேசிக பரமாசாரிய சுவாமிகள், 19-ஆவது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்க வாசக தேசிக பரமாசாரிய சுவாமிகள், 24-ஆவது மகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக பரமாசாரிய சுவாமிகள் ஆகிய மூன்று குருமூர்த்தியின் ஆலயங்கள் எழிலுடன் விளங்குகின்றன. அவை 25-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களால் புதிதாகக் கட்டப்பெற்று சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து அஷ்டபந்தனமகாகும்பாபிஷேகமும் பின்னர் செய்விக்கப்பெற்றன தற்பொழுது அவை பழுது பார்க்கப் பெற்று, சுதை வேலைகள் செய்து வர்ணம்தீட்டி அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் 7-6-70 ஞாயிற்றுக்கிழமை அன்று ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களால் செய்விக்கப்பட்டது. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் கும்பாபிஷேகத்திற்கும் மகாபிஷேகத்திற்கும் எழுந்தருளி வழிபாடாற்றினர்கள். அன்பர்கள் பலரும் வந்து வழிபட்டனர். சமயச் சொற்பொழிவுகளும் நடைபெற்றன.

ஆச்சாள்புரத்தில் :

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான ஆச்சாள்புரம் ஸ்ரீ சிவலோகத் தியாகராஜசுவாமி தேவஸ்தானத்தில், ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமிகள் திருமணவிழா 22—5—70 வெள்ளிக்கிழமை மிக்க சிறப்புடன் நிகழ்ந்தது.

அன்றுகாலை 9 மணிக்குமேல் 10-30க்குள் ஸ்ரீ திருஞானசம்பந்தருக்கு உபநயனமும், மாலையில் மாலை மாற்றுதல், ஊஞ்சல் முதலியனவும் நிகழ்ந்தன. இரவு 9 மணிக்குமேல் 10 மணிக்குள் ஸ்ரீ திருஞானசம்பந்தருக்கும், ஸ்ரீ தோத்திர பூரணம்பிகைக்கும் திருமணம் சிறப்புற நிகழ்ந்தது. அன்று இரவு புஷ்பப்பல்லக்கில் திருஞானசம்பந்தர் திருமணக்கோலத்துடன் திருவீதிவலம் வருதலும், பின்னர் பேரின்பப் பேறளிக்

கும் திருப்பதிகம் ஓதுதலும், இரவு மணி 4க்குமேல் 6க்குள் சிவஜோதி தரிசனமும் நிகழ்ந்தன. இத்திருவிழாவைக்காண அன்பர்கள் பலர் ஆண்டுதோறும் திரளாக வருவர். இவ்யாண்டும் அன்பர்கள் பலர் கண்டு உய்ந்தனர்.

திருஞானசம்பந்தர் திருமண விழாவில் தேவார வகுப்பு ஆண்டுவிழா நடைபெற்றது தேவார வகுப்பு மாணவ மாணவியருக்கு ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தின் அருளால் பரிசுகள் வழங்கப்பட்டன. உயர்திரு எ. விஸ்வநாதன் பி. ஏ., பி. எல்., அவர்கள் 'தேவார வகுப்பில் பல குழந்தைகள் ஈடுபட்டுக் கலந்துகொண்டு தேவாரம் ஓதுதல் மகிழ்ச்சியைத் தருகிறது. அக்குழந்தைகள் தேவாரம் பயில்வதற்கு ஊக்கம் தரும் வகையில் இப்பரிசு ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களால் வழங்கப்பெறுகிறது. இப்பரிசுகளைப் பெறும் குழந்தைகள் மேலும் ஊக்கத்தோடு இதில் கலந்துகொண்டு பயன்பெற வேண்டும்' என்றுகூறிப் பரிசுகளை வழங்கினார்கள்.

பின்னர் கீதாரத்னம், கீதாப்ரவசன சாம்ராட், கீதாநிதி உயர்திரு எ. விஸ்வநாதன் பி. ஏ., பி. எல்., அவர்களும் திருமதி முத்துலக்ஷ்மி விஸ்வநாதன் அவர்களும் திருஞானசம்பந்தர் வரலாற்றை இன்னிசைக் கதையாக நிகழ்த்தினார்கள். அன்பர்கள். பலர் கேட்டுமகிழ்ந்தனர்.

திருக்குவளையில் :

தருமையாதீனம் திருக்குவளை ஸ்ரீதியாகராஜசுவாமி தேவஸ்தானத்தில் வைகாசித்திங்கள் பெருவிழா 3–5—70 ஞாயிற்றுக் கிழமை முதல் தொடங்கி நடைபெற்றது இங்கு இத்திருவிழா பதினெட்டு நாட்கள் நடைபெறுகின்றன. ஸ்ரீ விநாயககர், ஸ்ரீ சுப்பிரமணியர், ஸ்ரீ சந்திரசேகரர் உற்சவங்கள் நடைபெற்றபிறகு 11—5—70இல் சதுர்துவஜாரோகணம் நிகழ்ந்தது. அன்றுமுதல் பத்துநாட்கள் திருவிழா நடைபெற்றது. நாள்தோறும் பஞ்சமூர்த்திகள் புறப்பாடும். 17—5—70 ஞாயிற்றுக் கிழமை திருத்தேர்த் திருவிழாவும் நடைபெற்றது. அன்று திருத்தேரில் ஸ்ரீ தியாகராசர் பவனிவரும் அற்புதக்காட்சி நடைபெற்றது.

20—5—70 கொடியிறக்கம் நிகழ்ந்தது. அன்பர்கள் பலர் விழாவைக் கண்டு களித்தனர்.

---




ஜோதிஷார்ணவம்,

**திரு. K. முத்துஜோதிடர்**

( சாதாரணஹு ஆடிமீ 1உ முதல் 31உ முடிய )

( 17—7—70 முதல் 16—8—70 முடிய )

தக்ஷிணாயன புண்ணியகாலம்: தக்ஷிணாயன பிரவேசம் ஆனிமாதம் 32 ஆந்தேதி குருவாரம் மூல நக்ஷத்திரமும் மகர லக்கினமும் கூடிய சுபதினத்தில் உதயாதி 33 நாழிகை. 39 வினடிக்கு ஸ்ரீ லோகரக்ஷகரான சூரியபகவான் கடகராசி பிரவேசம் செய்கிறார். பிரவேச காலபலத்தால் தக்ஷிணாயனத்தில் விளையக்கூடிய சஸ்ய தானியாதிகள் விசேஷ விருத்தி ஏற்பட்டு உலகம் சுபிக்ஷமடையும். விசேஷமாக தக்ஷிண தேசம் காவேரி தீரம் விசேஷமாக, தான்யத்தை விருத்திசெய்து தரும். தர்மம் எங்கும் ஓங்கி நிற்கும். தெய்வசக்தி பிரகாசிக்கும். சுபம் தரும்.

1. மேஷம் – அசுவதி – பரணி – கார்த்திகை $\frac{1}{4}$

மேஷராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். அடிக்கடி சஞ்சாரம் ஏற்படும், ஆரோக்கியக் குறைவு காட்டும். வரவு செலவு சமமாக இருக்கும் தெய்வபலம் முன்னின்று அரிஷ்டங்களை விலக்கி நன்மைகளைத் தரும். வெள்ளி, சனி சுபமாகும்.

2. ரிஷபம் – கார்த்திகை $\frac{3}{4}$ – ரோஹிணி – மிருகசீர்ஷம் $\frac{1}{2}$

ரிஷபராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும், ஸ்திரமான ஜீவனம் ஏற்படும். நஷ்டமான பொருள்கள் கொஞ்சங்கொஞ்சமாக வந்துசேரும். விவகாரம் ஜெயிக்கும். விவசாயம் ஓங்கும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

3. மிதுனம் – மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை – புனர்பூசம் ¾

மிதுனராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். தூர தேசத்திலிருந்து அழைப்புகள் வரும். புதிதான தொழிலால் விசேஷமான லாபம் தரும். வம்சவிருத்தி ஏற்படும். ஜீவனம் ஓங்கும். உத்தியோகத்தில் உயர்பதவி கிடைக்கும். செவ்வாய், புதன் சுபமாகும்.

4. கடகம் – புனர்பூசம் ¼ – பூசம் – ஆயில்யம்

கடகராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத்தரும். புதிதாக தெய்வசக்தி உண்டாகி சாதிக்கமுடியாததெல்லாம் சாதிக்கமுடியும். ஸ்தாவர சங்கம சொத்துக்களில் கிரய விக்ரயமும் ஏற்படும். எதிர்பாராதபடி மேன்மையான ஜீவன லாபம் கிடைக்கும். ஆரோக்யம் உண்டாகும். வியாழன் வெள்ளி சுபமாகும்.

5. சிம்மம் – மகம் – பூரம் – உத்திரம் ¼.

சிம்மராசி 9 பாதங்களும் மிச்சிரமான பலனைத்தரும். சுபசோபனுதிகள் ஏற்படும். ஜீவனம் ஓங்கும். வம்சவிருத்தி ஏற்படும் வரவு செலவு சமமாகும். இடம் மாறுதல் ஏற்படும். சனி, ஞாயிறு சுபமாகும்.

6. கன்னி – உத்திரம் ¾ – ஹஸ்தம் – சித்திரை ½.

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். காரியங்களில் விக்னங்களும் எதிர்பாராத சிற்சில அசௌகரியங்களும் உண்டாகும். ஆரோக்யக்குறையும் அதிகமான செலவுகளும் ஏற்படும். தெய்வபலம் முன்னின்றுகொண்டு சகலமான அரிஷ்டங்களையும் நிவர்த்திசெய்து பூர்ணமாக சுபத்தைத்தரும். திங்கள், செவ்வாய் சுபமாகும்.

7. துலாம் – சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾

துலாராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத் தரும். ஜீவனம் ஓங்கும். மேலோர் பெரியோர்களின் அன்பினுலும் ஆசியாலும் சாதிக்க முடியாததெல்லாம் சாதிக்க முடியும் இல்லறம் ஓங்கும். தெய்விகமான காரியங்களும் சுபசோபனுதி

களும் அடிக்கடி உண்டாகும். அதிகமான உழைப்பும் சஞ்சார பலனும், உண்டாகும். புதன், வியாழன் சுபமாகும்.

8. விருச்சிகம் – விசாகம் ¼ – அனுஷம் – கேட்டை.

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரமான பலனைத்தரும். மாதம் முன்பாதியில் அதிக செலவுகளும் ஆரோக்யக்குறைவும் வீண் செலவுகளும் உண்டுபண்ணும். பின்பாதியில் சகல விதமான வசதிகளும் ஏற்பட்டு குடும்பம் ஓங்கும். சத்ருக்கள் சரண் அடைவார்கள். வெள்ளி, சனி சுபமாகும்.

9. தனுசு – மூலம் – பூராடம் – உத்திராட ¼.

தனுர் ராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தைத்தரும், தூரதேச யாத்திரையும் சஞ்சாரமும் ஏற்படும். நஷடமான பொருள்கள் வந்துசேரும். குடும்பம் ஓங்கும், புத்திராதி களால் விசேஷமான நன்மை ஏற்படும். மனம் சந்தோஷம் அடையும். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

10. மகரம்– உத்திராடம் ¾ – திருவோணம் – அவிட்டம் ½

மகரராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தையே தரும். உத்தியோகத்தில் மேல்பதவி கிடைக்கும், மேலோர்களாலும் பெரியோர்களாலும் விசேஷமான நன்மை ஏற்படும். ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் விருத்தியாகும். மனம் சாந்தியும் வியாதி சாத்தியும் தரும். செவ்வாய் புதன் சுபமாகும்.

11. கும்பம் – அவிட்டம் ½ – சதயம் – பூரட்டாதி ¾,

கும்பராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும் வைத்ய செலவு அதிகமாகும், புத்திராதிகளால் கவலையை உண்டு பண்ணும், குடும்ப விருத்தியும், சுபசோபனுதிகளும் உண்டாகும் தெய்வபலம் முன்னின்று காக்கும், குடும்பம் ஓங்கும். வியாழன் வெள்ளி சுபமாகும்.

12. மீனம் – பூரட்டாதி ¼ – உத்திரட்டாதி – ரேவதி.

மீனராசி 9 பாதங்களும் பூர்ணமாக சுபத்தையே தரும். மேலோர் பெரியோர்களின் ஆசியும், ஜீவனத்தில் விசேஷ

மான மேன்மையும் இல்லற சுகமும் ஓங்கும், ஆரோக்யம் தரும், சகலமும் நிவர்த்தியாகும், தெய்வபலம் முன்னின்று காக்கும். சுபம் உண்டாகும், சனி ஞாயிறு சுபமாகும்.

குறிப்பு :- கடக பிரவேச லக்னத்துக்கு 7 ல் ராஜா செவ்வாய் நீசமடைந்து சத்துரு கிரகசேர்க்கை அடைந்தும் மந்திரி சந்திரன் ராஜாவுக்கு 6ல் பிரவேச லக்னத்துக்கு 12 லும் 2, 8 ல் ராகு கேதுக்களும் அமர்ந்திருப்பதால் விந்தியோத்ர தேசம் இந்திரபிரஸ்தம் முதலிய தேசங்களிலும், வெளிநாடுகளிலும், இயற்கைக் கோளாறுகள் அதிகரித்தும் மாநுஷாத்புதங்களும், பரசக்ர பயமும் காட்டுமாதலால் சகல பூமிகளிலுமுள்ள ஆஸ்தீக ஜனங்களும் மேலோர் பெரியோர்களும், சாதுக்களும் பக்தர்களும் இடைவிடாது ஸ்ரீ பகவானை லோகக்ஷேமமார்க்கமாக சதா பிரார்த்தனை செய்துகொண்டும் அமைதியாகவும் சாத்வீகமாகவும், கோபதாபமில்லாமல் பிரஜைகளை சன்மார்க்கத்தில் இருக்கும்படிக்கும் சதா பிரசாரம் செய்துகொண்டு சுபிக்ஷத்தையும், க்ஷேமத்தையும் பிரார்த்தித்துவர சகல மங்களமும் உண்டாகும். சுபம் தரும்.



தருமையாதீனம் ஸ்ரீ ஞானபுரீசுவரர் மகோற்சவத்தில் நிகழ்ந்த
திருநெறிய தெய்வத் தமிழ்மாநாட்டிற்கு 22—5—70ல் வருகைபுரிந்த



திருவண்ணாமலை ஆதீனம் குன்றக்குடி மகாசந்நிதானம் அவர்கள்
(குன்றக்குடி அடிகளார் M. L. C.)
தமிழக அரசு சட்டம், நீதித்துறை அமைச்சர்
மாண்புமிகு. திரு. மாதவன் B. Sc., B. L. அவர்கள் ஆகியோருடன்
ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்

தருமையாதீனத்துக்குச்சொந்தமான புள்ளிருக்குவேளூர்

# ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம்

# மகாகும்பாபிஷேக விழா மலர்

தென்னாட்டில் மிகச் சிறந்த பிரார்த்தனைத் தலமாக விளங்குவது புள்ளிருக்குவேளூர். சம்பாதி, சடாயு, இராம இலக்குமணர், வேதம், முருகன், சூரியன் முதலியோர் வழிபட்ட பெருமையுடையது இறைவன், தீராநோய் தீர்த்தருள்கின்ற வைத்தியநாதனாக விளங்குகிறான். முருகன் ஸ்ரீ செல்வமுத்துக் குமாரசுவாமி என்ற திருப்பெயரோடு கண்கண்ட தெய்வமாய் விளங்கிவருகின்றார். ஞானசம்பந்தர், நாவுக்கரசர் முதலிய அருளாளர்கள் பலரும் பாடிப் பரவிய திருத்தலம். மூர்த்தி' தலம், தீர்த்தம் என்ற மூவகையாலும் சிறப்புற்ற இத்தலத் திருக்கோயிலைத் தருமையாதீனம் 25வது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் இராஜகோபுரங்கள், விமானங்கள் முதலிய அனைத்தையும் புதுப்பித்து 2—7—1969 அன்று ஜீரணோத்தாரண அஷ்டபந்தன சுவர்ணபந்தன மகாகும்பாபிஷேகம் செய்வித்தருளினார்கள். கும்பாபிஷேக விழாவின் சிறப்பு மலர் இது. இம்மலர் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்களது வாழ்த்துரையுடனும், திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் முதலியோர் வழங்கியருளிய வாழ்த்துச் செய்திகளுடனும் வெளிவருகிறது.

வேதம், ஆகமம், இதிகாசம், புராணம், திருமுறை, சாத்திரம், தோத்திரம், இலக்கியம், கலை, சமயம், வாழ்வியல், திருக்கோயில், மருத்துவம், கல்வெட்டு ஆகிய பல தலைப்புக்களில் அறிஞர்கள் பலர் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் இம்மலரை அணிசெய்கின்றன. டிம்மி 1x4. ஆர்ட்படங்கள். வெள்ளை கிளேஸ் காகிதங்கள். பக்கங்கள் 534.

**விலை ரூ. 14—00. பதிவஞ்சல் கட்டணம் ரூ. 4—00.**

கிடைக்குமிடம் :— டிரஷரர், ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம், வைத்தீஸ்வரன்கோயில், தஞ்சைமாவட்டம், தமிழ்நாடு.

Printed & Published by, K. Sundaresa Iyer, Agent Dharmapuram Adhinam at the Gnanasambandam Press, Dharmapuram (Mayuram) 10—7—70.